# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Tuesday, the 9th September 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

MR. SPEAKER : நேற்றிரவு சென்னையிலிருந்து போன ப்ளேனுக்கு விபத்து ஏற்பட்டதால், கனம் அமைச்சர் வெங்கட்டராமன் சென்னைக்கு வர முடியவில்லை. அவர்கள் நாக்பூரில் இருக்கிறார்கள். புதிதாக ஒரு ப்ளேன் போயிருக்கிறது. ஆனாலும், அவர் வரும்போது, 10 மணி ஆகும். அவர்கள் பதிலளிக்க வேண்டிய கேள்விகளைப் பின்னால் எடுத்துக் கொள்ளலாம்.

AN. HON. MEMBER : அவர்கள் சுகமாக இருக்கிறார்கள் அல்லவா ?

MR. SPEAKER : அவர்களுக்கு ஒன்றும் இல்லை.

*Drinking water*

* 79 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state the action taken by the Government so far to provide a drinking water well under the Rural Water-supply Scheme for the Thotticheri (Harijan) colony of Kazhiperumbakkam village, Kiliyanur firka, Tindivanam taluk, South Arcot district?

THE HON. SRI M. A. MANICKAVELU : The work of construction of a well for the Harijan colony has been included in the current year's Rural Water-supply Comprehensive Programme for the South Arcot district. The work is expected to be taken up shortly.

SRI M. JAGANNATHAN : இந்தக் கிணறு வெட்ட எவ்வளவு செலவாகும் என்று அமைச்சர் கூறுவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதைப்பற்றிக் குறிப்பாகக் கேட்டிருந்தால், அந்த விவரங்களைச் சேகரித்திருக்கலாம். இப்பொழுது அந்த விவரம் என்னிடம் இல்லை.

SRI M. K. SOMASUNDARAM : ஸார், இந்தக் கிணறு வெட்டும் தொகையை அரசாங்கமே முழுவதும் ஏற்றுக்கொள்கிறதா அல்லது பொது மக்களிடமிருந்து வசூலிக்கப்படுகிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த ரூரல் வாட்டர் சப்ளை காம்பிரிஹென்ஸிவ் ஸ்கீம் பிரகாரம், நூற்றுக்கு இருபத்தைந்து பங்கு பொது மக்கள் கொடுக்கவேண்டும் என்றிருக்கிறது. ஆனால் அதிலும், ஹரிஜனங்கள், இன்னும் தாழ்த்தப்பட்ட மக்கள் அதுகூட கொடுக்க வேண்டியது இல்லை.

SRI P. S. K. LAKSHIMIPATHI RAJ : இந்தக் கிணறு வெட்டுவது சம்பந்தமாக எஸ்டிமேட் தயாரித்ததில், ஆழமாக வெட்டப்படும் காரணத்தால், கூலி கிடைப்பதாக இல்லை ; ஏராளமான கிணறுகள் ஆழமாக வெட்டப்படுவதால் மக்கள் நஷ்டப்படுகிறார்கள் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தக் கேள்வி தென்னாற்காடு ஜில்லாவில் ஒரு குறிப்பிட்ட கிராமத்தைப்பற்றியது. அதனால், அதைப்பற்றியே பதில் கொடுக்க முடியும்.

[9th September 1958

Sri M. JAGANNATHAN : இந்தக் கிணறுகள் வெட்டும் விஷயத்தில், யாராவது ஹரிஜன மக்கள் காண்ட்ராக்ட் வேலை எடுக்க முன்வந்தால், அவர்களுக்குக் கொடுக்கப்படுமா என்று அறிவிக்க முடியுமா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : ஏன் கொடுக்கப்படாது ?

Sri K. VINAYAKAM : Sir, I rise on a point of order. In the first hour allotted for answering questions, it is the privilege of Members to put questions and it is the duty of the Members of the Cabinet to answer those questions. It is not found in any parliamentary procedure that Ministers should put questions to Members.

Mr. SPEAKER : It is an answer that the Hon. Minister gave.

Sri K. VINAYAKAM : " ஏன் கொடுக்கப்படாது " is an interrogative sentence. That is a question.

Mr. SPEAKER : The answer is evident. (Laughter.) It means it can be given. The hon. Member must have a sense of humour about it.

Sri S. NAGARAJA MONIGAR : ஸார், பிரஸ்தாபக் கிணறு வெட்ட எடுத்துக்கொண்டு எவ்வளவு நாள் ஆகிறது ? கீழுள்ள உத்யோகஸ்தர்களால் அதிக தாமதம் ஏற்படுகிறதா ? அவர்களைக் கொண்டு முடிக்கக் கூடாது யென்பதா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : அந்தமாதிரி குடி தண்ணீர் வசதி இல்லையென்று தெரிந்ததும், தாசில்தார் பரிசீலனை செய்து, அதற்கு வேண்டிய எஸ்டிமேட் தயார் செய்து, இப்பொழுது அது எடுக்கக் கூடிய நிலைமையில் இருக்கிறது.

Sri R. KRISHNASAMI NAIDU : தாலுகா, ஜில்லா அளவில் குடி தண்ணீர் வேலைகளைக் கவனிக்க, ப்ளானிங் போர்ட் முதலிய ஸ்தாபனங்கள் இருக்கின்றன. அவர்களிடமிருந்து விரிவான தகவல்களைப் பெற்றுக்கொள்ளலாம். ஆகவே இம்மாதிரி சிறு சிறு விஷயங்களுக்கும் சட்டசபையில் கேள்விகள் கேட்கவேண்டும் என்கிற அவசியம் நேருகிறதா ? அப்படியில்லை யென்றால், அதற்கான ஏற்பாடுகளை கனம் அமைச்சர் அவர்கள் செய்ய முன்வருவார்களா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர்கள் கேள்வி கேட்பதில் எனக்கு பொறுப்பில்லை. அது சபாநாயகர் பொருப்பு.

Mr. SPEAKER : அந்தப் பொறுப்பு எனக்கும் இல்லை. அது அங்கத்தினரிடமே இருக்கிறது.

Sri M. C. MUTHUKUMARASWAMY : ஸார், ஹரிஜனங்களுக்காக வெட்டப்படும் கிணறுகளை வெட்ட ஹரிஜனங்களுக்குத் தான் காண்ட்ராக்ட் கொடுக்கவேண்டுமென்று அரசாங்கம் ஒரு உத்திரவு போடுமா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : அப்படிச் செய்ய முடியாது. மற்ற விஷயங்களையும் கவனித்து எவ்வளவு தூரம் ஹரிஜனங்களுக்குக் கொடுக்க முடியும் என்று பார்த்துத் தான் செய்யவேண்டும். இல்லையென்றால், கிணறுகளே சரியாக வெட்டியாகாது.

Sri A. GOVINDASAMY : இந்தக் கிணறுகள் சாதாரணக் கிணறுகளா அல்லது ஓவர்ஹெட் டாங்கு கூடவா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : சாதாரணக் கிணறு என்றுதான் நினைக்கிறேன்.

9th September 1958]

SRI P. G. MANICKAM : ஹரிஜனங்கள் கிணறு வெட்டும் காண்ட்ராக்ட்கள் எடுக்க அநேகமாக முன்வருகிறதில்லை. அதற்குக் காரணம் இந்த வேலையில் சாதாரணமாக லாபம் வருவதில்லை. நஷ்டம் தான் வருகிறது. ஆகவே, கண்ட்ராக்டர்களுக்கு, ஹரிஜனங்களுக்கு கிணறு வெட்டுவதையும் எடுத்துக்கொண்டால் தான் காண்ட்ராக்ட் கொடுக்கப்படும் என்ற ஒரு நிபந்தனையைப் போட அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நிபந்தனை ஒன்றும் ஏற்படுத்துவது உசிதமில்லை. மற்ற விஷயங்களையும் ஆலோசித்து ஹரிஜனங்களுக்கு கொடுக்க முடியுமா என்றுதான் யோசிக்க முடியும்.

SRI K. B. S. MANI : சர்க்கார் பல துறைகளிலும், வெல்பேர் டிபார்ட் மெண்டு, ரூரல் வெல்பேர் வேலைக்காக கிணறுகள் அதிகமாக வெட்டப்படுகின்றன, தஞ்சை ஜில்லாவில். அதன் பிறகு, தண்ணீர் கிண்டிக்கு அனுப்பப்படுகிறது. ஆறு மாதம், ஒரு வருடம் கழித்து காலதாமதமாகி ரிஸல்ட் வருகிறது. அதிலிருந்து உப்புத் தண்ணீராக இருப்பதாக ஏற்படுகிறது. இதனால், பணமும் விரயமாகிறது, நேரமும் விரயமாகிறது. சாதாரணமாக எத்தனை கிணறுகள் இம்மாதிரி கைவிடப்பட்டன என்று தெரியுமா ? அதைத் தவிர்க்க வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தக் கேள்வியில் அது எப்படி வருகிறது ? தனிக் கேள்வி போடவேண்டும்.

SRI A. R. MARIMUTHU : ஹரிஜனங்களுக்கு நிலங்கள் கிடைக்காத காரணத்தால் கிணறுகள் வெட்டப்படாமல் இருக்கின்றன. ஆகவே துரிதமாக நிலங்களை அக்வயர் பண்ணி கிணறு வெட்ட துரிதமாக ஏற்பாடுகள் செய்வார்களா ? விதிப்படி அக்வயர் பண்ணக் கால தாமதம் ஏற்படுகிறது. ஆகவே விதியைத் திருத்தி அமைத்து துரிதமாக வேலை நடக்க ஏற்பாடுசெய்ய சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : துரிதமாகத்தான் இப்பொழுது செய்கிறோம். இன்னும் அதிக துரிதமாகச் செய்ய என்ன செய்யலாம் என்று அரசாங்கம் யோசிக்கும்.

### *Small-pox.*

* 89 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1–10–1957 முதல் 25–3–1958 வரை பெரியம்மையால் இறந்தவர்களின் எண்ணிக்கை என்ன (முனிசிபல் ஏரியா வாரியாக, பஞ்சாயத்து ஏரியாவாரியாக)?

(ஆ) அவர்களில்—

(1) ஆண்கள்.
(2) பெண்கள்.
(3) குழந்தைகள், எத்தனை பேர் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) & (ஆ) 1957 அக்டோபர் ஒன்றாம் தேதி முதல், 1958 மார்ச் 31-ம் தேதிவரை இந்த ராஜ்யத்தில் வைசூரியால் இறந்தவர்களின் எண்ணிக்கையைக் குறிக்கும் ஸ்டேட்மெண்டு[a] சபையின் மேசை மீது வைக்கப்பட்டிருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN : ஆறு மாத காலத்திலே 3,876 பேர்கள் இறந்து இருப்பதாகவும், அதில் 2,126 பேர்கள் குழந்தைகள் என்றும் இந்த ஸ்டேட்மெண்டில் காணப்படுகிறது. ஆகவே இதற்குக் காரணம் என்ன ? போதிய உணவு இல்லாத காரணமா அல்லது, குடி தண்ணீர் சரியாக இல்லாத காரணமா என்பதைத் தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த வைசூரி நோய் ஐந்தாறு வருஷங்களுக்கு ஒரு தடவை வருகிறது. முன்னால் 1950–51ல் வந்தது. பிறகு, 1957–58ல் வந்தது. இப்பொழுது கொஞ்சம்

---

[a] Printed as Appendix I on page 481 infra.

அதிகமாக இருக்கிறது. " **Periodicity** " என்ற அந்த வகையில், ஒரு ஸைக்கிள் மாதிரி ஐந்தாறு வருஷத்திற்கு ஒரு தரம் வருகிறது. அவ்வளவுதான்.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், இந்த வியாதி அநேகமாக வெய்யில் காலத்தில்தான் வருகிறது என்பது வாஸ்தவம் தான். அப்படியானால் அதற்கு உஷ்ணம் காரணமாக இருக்கிறது என்பதை அரசாங்கம் கருதுகிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது சாதாரணமாக குழந்தைகளுக்குக் கூட தெரியும். வெய்யில் காலத்தில்தான் அது வரும் என்று.

SRI M. JAGANNATHAN : In view of the fact that small-pox has taken a heavy toll of human lives, may I know why the medical authorities concerned failed to take adequate preventive measures?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir. As soon as they come to know of any infection, they at once take all prophylactic action in those cases. In certain cases, information about the attack is not disclosed. So, the authorities concerned are not aware of the same. But, as soon as they are aware of the infection, they take all precautions. That is why we are able to control it. For instance, I may tell the hon. Member that about 1,511,170 primary vaccinations and 1,419,799 re-vaccinations were done during the present epidemic period up to 1st March 1958. This shows that as soon as they come to know of the infection, they take all necessary precautions.

SRI M. K. SOMASUNDARAM : ஸார், குறிப்பிட்ட வருஷத்தில் மொத்தம் எத்தனை குழந்தைகள் பிறந்திருக்கின்றன. சட்ட ரீதியாக குழந்தைகள் பிறந்த ஆறு மாதங்களுக்குள் அவைகளுக்கு அம்மை குத்த வேண்டும் என்று இருக்கிறது. அப்படி அந்தக் குழந்தைகளுக்கு அம்மை குத்தப்பட்டிருக்கின்றனவா, எத்தனை குழந்தைகளுக்கு அம்மை குத்தப்பட்டிருக்கிறது என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : இதைப்பற்றி தனியாக கேள்வி போடுங்கள். அதன் பிறகு அதற்கு பதில் சொல்ல முடியும்.

*Disposal of appeals*

* 93 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there is any time-limit for the disposal of appeals against the order of appointment of village officers—

(i) by Revenue Divisional Officers to District Collectors and (ii) against those of District Collectors to the Board of Revenue; and

(*b*) whether there is any time-limit within which orders should be passed from the date of hearing of such appeals?

THE HON. SRI M. A. MANICKAVELU : (i) & (ii) No.

9th September 1958]

**Sri S. LAZAR:** சிவில் கோர்ட்டுகளில் கன்வென்ஷன் இருப்பது போன்று ரெவினியூ கோர்ட்டுகளிலும் தீர்ப்புக் கொடுப்பதற்கு கன்வென்ஷன் முறையை ஏற்படுத்தி தீர்ப்பு கூறுவதற்கு முன் வருவார்களா? அல்லது அவசியம் ஏற்பட்டால் அதற்கு வேண்டிய உத்தரவை சர்க்கார் பிறப்பிப்பார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU:** காலவரையரை இருக்க வேண்டும் என்பது அப்பீல் பைல் பண்ணுவதைப்பற்றி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. எவ்வளவு நாட்களுக்குள் தீர்ப்புக் கொடுக்க வேண்டும் என்பதற்கு காலவரையரை இல்லை. இப்பொழுது நடக்கிற முறையைப் பார்த்தால் ஏறக்குறைய குறுகிய காலத்திலேயே தீர்ப்புக் கொடுக்கப்பட்டு தான் வருகிறது. ஆகையால் காலவரையரை இருக்க வேண்டுமென்பதற்கு அவசியம் இல்லை.

**Sri S. M. ANNAMALAI:** கிராம உத்தியோகஸ்தர்களை நியமிப்பதில் பாரம்பரிய முறையை ஒழிப்பதற்கு இப்பொழுது சட்டம் வருமா?

**The Hon. Sri M. A. MANICKAVELU:** இது முற்றிலும் தவறான கேள்வி. இருந்தாலும் அதைக் கொண்டு வருவதைப்பற்றி யோசனையில் இருக்கிறது.

**Sri K. R. VISWANATHAN:** கிராம முன்சீப், கணக்குப் பிள்ளை உத்தியோகங்களை மற்ற சர்க்கார் உத்தியோகங்களைப்போல் சுருக்கமான முறையில், அப்பீல் இல்லாத வழியில் நியமிக்க ஏதாவது சர்க்கார் வழி செய்வார்களா? கிராம முன்சீப், கணக்குப்பிள்ளை உத்தியோகங்களில் நியமன முறையில், அப்பீல் முறை இருப்பதால் ஆயிரக் கணக்கான ரூபாய் செலவிடப்படுகின்றன. அம்மாதிரியான முறையைத் தடுப்பதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU:** இப்பொழுது நடந்து வருகிற முறையில் ஒன்றும் குறைவு இல்லை. கனம் அங்கத்தினர் பணம் அதிகமாக செலவழிக்கப்படுகிறது என்று சொல்கிறார். கடைசி வரைக்கும் நியாயம் கிடைக்கும் என்று நினைத்து அதனால் வாதாடலாம், வாதாடிப் பார்த்து விடலாம் என்ற மனப்பான்மை சிலருக்கு இருக்கிறது. அதை நாம் . . . (கட்டுப்படுத்த முடியாது).

**Sri K. B. S. MANI:** இப்பொழுது அப்பீல் செய்து கொள்வதற்கு மட்டும் காலவரையரை வைக்கப்பட்டிருக்கிறது என்றும், மற்றப்படி எவ்வளவு மாதங்களுக்குள் தீர்ப்புக்கொடுக்க வேண்டும் என்பதற்கு காலவரையரை விதிக்கவில்லை என்று கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார். இப்பொழுது அப்பீல் செய்துகொள்ளுகிறவர்கள் அநேகமாக ஏழைகளும், கஷ்டமான ஜீவனம் செய்கிறவர்களும், சிறிய உத்தியோகஸ்தர்களுமாக இருக்கிறபடியால் அப்படி அப்பீல் செய்து கொள்வதற்கு வேண்டிய காலத்திற்குள் அப்பீல் செய்து கொள்ள வேண்டும் என்றும் அதன்பேரில் அப்பீல் தீர்ப்புக் கூறுவதற்கு ஒரு காலவரையறை அமைக்க வேண்டியது அவசியம் என்றும் உணர்ந்து அதற்கு அரசாங்கம் வேண்டிய நடவடிக்கை எடுக்குமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU:** அம்மாதிரி ஒரு காலவரையரை அமைப்பது அவசியம் என்று அரசாங்கத்திற்கு ஏற்படவில்லை.

**Sri M. C. MUTHUKUMARASWAMY:** கிராம உத்தியோகங்களை, தஞ்சை ஜில்லா பொறுத்த வரையில், பாரம்பரியமாகக் கொடுக்கப்பட்டு வருகிறது. அதை அனுசரித்து பல வழக்குகள் தொடரப்பட்டிருக்கின்றன.

[9th September 1958

ஆகவே பாரம்பரியம் என்ற முறையை மாற்றி தகுதியுள்ளவர்கள் என்பதைப் போடுவதற்கு அரசாங்கம் ஏதாவது உத்தரவு போடுவார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU** : இப்பொழுது கிராம உத்தியோகஸ்தர்களுடைய அமைப்பை மாற்றி அமைப்பதற்கு என்று ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டு அந்தக் கமிட்டியும் முன் கிராம உத்யோகஸ்தர்களுடைய அமைப்பைப்பற்றி பரிசீலனை செய்து வருகிறது. கூடிய சீக்கிரத்தில் அதைப் பற்றி ஏதாவது முடிவு செய்யப்படும். பரிசீலனை முடிவடைந்து முடிவு கூறும்போது இந்த விஷயமும் அதில் அடிப்பட்டுப்போய் விடும்.

**Sri S. NAGARAJA MONIGAR** : கிராம உத்யோகஸ்தர்கள் அவர்களுடைய பதவி விஷயமாக கோரி வரும் விண்ணப்பங்கள். அப்படி நியாயமாக கோரி வருபவைகள் எல்லாம் ரிவினியூ போர்ட் வரையில் தான் வருகிறதா, அவர்களுடைய விண்ணப்பங்கள் ரிவினியூ போர்டிலியே பைசல் செய்யப்பட்டு விடுகிறதா அல்லது ரிவினியூ போர்டின் பைசலுக்குக் பிறகு சர்க்கார் வரையிலும் வருகிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU** : சர்க்கார் வரையிலும் வருகிறது.

**Sri S. LAZAR** : இது போன்ற அப்பீல்கள் குறுகிய காலத்திலேயே தீர்ப்பளிக்கப்படுகிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார். அந்தக் குறுகிய காலம் என்ன, எவ்வளவு என்பதை நான் அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU** : கனம் அங்கத்தினரே ஒரு அட்வோகேட். எல்லா கேஸ்களும் ஒரே காலத்தில் தீர்ப்பு அளிக்கப்பட மாட்டாது என்பது அவருக்கே தெரியும். சில கேஸ்கள் ஒரு வருடத்திலும் சில கேஸ்கள் இரண்டு வருஷங்களிலும் தீர்ப்பளிக்கப்படலாம். அதைப் போலவே இங்கேயும் ஒரு திட்டவட்டமாகச் சொல்வதற்கு இல்லை.

*Land holdings*

* 97 *Q.*—**Sri S. LAZAR** : Will the Hon. the Minister for Revenue be pleased to state the steps taken by the Government—

(i) to prevent fragmentation of land holdings; and

(ii) to promote consolidation of land holdings?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : The matter is under the consideration of the Government. No decision has yet been arrived at.

**Sri S. LAZAR** : Is there any Act of the Central Government to this effect and is it not a fact that certain States are implementing it? May I know why there is so much delay in our State alone?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : One difficulty that we came across is that any legislation for consolidation and prevention of fragmentation of holdings will directly affect the law of inheritance which will lead to a number of other complications. That was one of the reasons why we could not implement it.

9th September 1958]

SRI K. ANBAZHAGAN : அந்தக் கேள்வியினுடைய நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு ஏதுவாக கூட்டுறவு முறையில் சாகுபடியை பல இடங்களில் கொண்டு வரப்படும் என்ற கருத்து அரசாங்கத்தாரால் முன்னர் தெரிவிக்கப்பட்டது. அந்த நோக்கம் எந்த அளவு நிறைவேறியிருக்கிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்த முயற்சி எடுத்துக் கொள்ளப்பட்டது. அதன்படி மூன்று இடங்களில் கூட்டுறவு சொசைட்டிகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் அவைகள் அவ்வளவு திருப்திகரமாக வேலை செய்யவில்லை.

SRI M. JAGANNATHAN : The Hon. Minister has stated that any attempt to prevent fragmentation of holdings will affect the law of inheritance. Will the Government consider the desirability of recommending to the Union Government to amend the law of inheritance in such a way as to accept the principle of the law of primogeniture?

THE HON. SRI M. A. MANICKAVELU : It is a very general and all-embracing question. So, I am not in a position to give a direct answer to it now.

SRI K. B. S. MANI : சர்க்கார் கூட்டுறவு முறையில் இந்த திட்டத்தை நல்ல முறையில் ஆரம்பித்து பயன்படுத்த வேண்டும் என்றும் அதற்காக தனிப்பட்ட அதிகாரிகளையும் ரிஜிஸ்தரார்களையும் நியமித்து பல இடங்களில் கூட்டுறவு முறையில் பண்ணைகளை ஏற்படுத்த வேண்டும் என்று முயற்சி எடுத்துக்கொண்ட போது பல இடங்களில் தனிப்பட்ட சில மடாதிபதிகள் பண்ணைகளை ஏற்படுத்த முடியாதபடி நிலங்களை காலாகாலத்தில் கொடுக்காமல் தடுத்திருக்கிறார்கள். அவர்கள் பேரில் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : அம்மாதிரியான தகவல் ஒன்றும் அரசாங்கத்திற்கு வரவில்லை. அப்படி தடுத்திருந்தால் அது எல்லோருக்கும் தெரிந்திருக்கும்படியாக அவர்கள் தடுத்திருக்க மாட்டார்கள்.

*Fudukulattur taluk*

* 101 *Q.*—SRI A. PERUMAL : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இராமநாதபுரம் ஜில்லா முதுகுளத்தூர் தாலூகா அபிவிருத்தி சம்பந்தமாக யூனியன் அரசாங்கம் சென்னை அரசாங்கத்திற்கு ஏதாகிலும் உத்திரவு பிறப்பித்துள்ளதா ?

(ஆ) அப்படியானால் அந்த வேலை எப்போது தொடங்கும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) No, Sir.

(b) Does not arise.

SRI A. GOVINDASAMY : முதுகுளத்தூர் பகுதி மிகவும் பிற்போக்கான கவனிக்கப்படாத பகுதி என்று அரசாங்கமே ஒப்புக்கொண்டிருக்கிறது. அப்படியானால் அதை முன்னேற்றத்திற்குக் கொண்டு வருவதற்கு தீவிர நடவடிக்கை எடுத்திருக்கிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அது பிற்போக்கான பகுதிகளில் ஒன்று என்று சர்க்கார் ஒப்புக்கொண்டு அதற்காக இப்பொழுது தேசிய அபிவிருத்தி திட்டம் அங்கே அமுல் நடத்தப்படுகிறது. அத்துடன்

இப்பொழுது அங்கே அதிகப்படியான பணம் செலவழித்து அங்கே இருக்கக்கூடிய பாசன வசதிகள், மின்சார வசதிகள் இவைகளையெல்லாம் நல்ல முறையில் அமைத்துக்கொடுக்க சர்க்கார் முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

SRI K. RAMACHANDRAN : இந்தப் பகுதியினுடைய முன்னேற்றத்திற்காக மத்திய சர்க்கார் ஏதோ மான்யத் தொகை அளித்ததாகக் கேள்விப்படுகிறேம். அந்தத் தொகையிலிருந்து என்ன என்ன வேலைகள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்கென்று தனியாக மான்யத் தொகை ஒன்றும் வரவில்லை.

SRI T. L. SASIVARNA THEVAR : இன்றையதினக் கேள்விப் பட்டியலிலே ஒரு கேள்வி இருக்கிறது. எனது சக அங்கத்தினர் ஸ்ரீ பெருமாள் ஒரு கேள்வி போட்டிருக்கிறார்கள். மத்திய சர்க்காரிலிருந்து இதற்கென பிரத்தியேகமாக மான்யம் வந்திருக்கிறது என்று கேள்விப்படுகிறேம். அம்மாதிரி எவ்வளவு மான்யம் வந்திருக்கிறது, அதிலிருந்து எவ்வளவு தொகை இதுவரை செலவழிக்கப்பட்டிருக்கிறது என்று அமைச்சர் அவர்கள் தெரிவிப்பாரா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனியாக இதற்கென்று மத்திய சர்க்காரிடமிருந்து மான்யம் ஒன்றும் வரவில்லை.

SRI M. KALYANASUNDARAM : இராமநாதபுரம் ஜில்லா, அதிலும் கிழக்குப் பகுதி, மிகவும் பிற்பட்டிருக்கும் காரணத்தினால், அதை எந்த எந்தத் துறையில் முன்னேற்றத்திற்குக் கொண்டுவரலாம் என்பதை ஆராய்வதற்கு என்று தனியாக ஒரு உத்தியோகஸ்தர் நியமிக்கப்பட்டு அவர் பரிசீலனை செய்தாரா ? அவர் என்ன சிபார்சுகளைச் செய்திருக்கிறார் ? அந்தச் சிபார்சுகளின் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : I have already said that amenities such as roads and communications, schools, electricity and irrigation sources are lacking in the district and we are now taking all steps to see that these amenities are made available to the people there.

SRI R. KRISHNASAMI NAIDU : சபாநாயகர் அவர்களே, முதுகுளத்தூர் தாலுகாவிலே சென்ற வருஷத்திலே நடந்த கலவரங்களால் பாதிக்கப்பட்டவர்களுடைய வீடுகளைப் புதிதாகக் கட்டிக் கொடுப்பதற்குப் பல லட்சக்கணக்கான ரூபாய்கள் செலவில் திட்டமிட்டு, அந்தச் செலவிலே மத்திய சர்க்காரும் பங்கெடுத்துக்கொண்டதாக கேள்விப்படுவது உண்மை தானா ? சரிதானா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : வீடு கட்டும் திட்டத்திற்காக மத்திய சர்க்காரிடமிருந்து உதவி கிடைத்திருக்கிறது. ஆனால், இங்கு இப்பொழுது சபை முன் இருக்கும் கேள்வி அபிவிருத்தித் திட்டங்கள் பற்றியது.

SRI A. V. P. ASAITHAMBI : முதுகுளத்தூர் தாலுகா பகுதியிலே கலவரம் நடந்ததற்குப் பிறகு எத்தனை மைல் நீளத்திற்குச் சாலைகள் போடப்பட்டிருக்கின்றன என்பதை அமைச்சர் அவர்கள் தெரிவிப்பாரா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சாலைகள் வெகுவாகப் போடப் பட்டிருக்கின்றன. ஆனால், எத்தனை மைல் நீளத்திற்குப் போடப்பட்டிருக்கின்றன என்று உடனடியாகச் சொல்ல முடியாது.

9th September 1958]

**SRI N. R. THIAGARAJAN** : இராமநாதபுரம் ஜில்லா எக்ஸ் ஜமீந்தாரி ஏரியாவின் அபிவிருத்தி பற்றி விசாரிப்பதற்கு ஸ்ரீ அருள்தாஸ் என்பவரை டெவலப்மெண்ட் கமிஷனராக நியமித்து, அவர் ஒரு ரிபோர்ட் தயார் செய்து, மூன்று, நான்கு வருஷங்களுக்கு முன் சர்க்காருக்குச் சமர்ப்பித்திருக்கிறாரே, அதன் மீது சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத் திருக்கிறார்கள் என்று அமைச்சர் அவர்கள் தெரிவிக்க முடியுமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : அதற்காக தனி கேள்வி போட்டால் பதில் சொல்கிறேன்.

**SRI S. LAZAR** : முதுகுளத்தூர் பகுதி மிகவும் பிற்போக்காக இருக்கும் காரணத்தால் அங்கு தனிப்பட்ட சலுகைகள் அளித்து, அபிவிருத்தி வேலைகள் நிறைவேற்றப்படுகின்றன. அதேபோன்று மிகவும் பிற்பட்ட முறையிலே இருக்கும் திருச்சி ஜில்லா, உடையார்பாளையம் தாலூகா போன்ற இடங்களிலும் இதுபோன்று தனிப்பட்ட திட்டங்களை அமுலுக்குக் கொண்டுவர சர்க்கார் முயற்சிக்குமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : இராமநாதபுரம் ஜில்லா வின் கிழக்குப் பகுதி மட்டுமல்லாமல், ராஜ்யத்தில் இன்னும் சில இடங்களும் பிற்பட்ட நிலையில் இருக்கின்றன. அந்த பிற்போக்குப் பகுதி களை எல்லாம் முன்னுக்குக் கொண்டுவருவதற்கு எல்லா நடவடிக்கை களையும் எடுக்க சர்க்கார் முயற்சிக்கும்.

**SRI K. R. VISWANATHAN** : அம்மாதிரி அபிவிருத்தித் திட்டங்கள் மிகவும் பிற்போக்குப் பகுதியாக இருக்கும் உடையார்பாளையம் தாலூகாவில் எடுத்துக்கொள்ளப்படுமா ? முதுகுளத்தூரில் நடந்ததைப் போன்ற கலவர நிகழ்ச்சிகள் நடந்த பிறகுதான் அபிவிருத்தித் திட்டங்கள் புகுத்த வேண்டுமென்ற எண்ணம் சர்க்காருக்கு இல்லை என்று நினைக் கிறேன். ஆகையால், உடனடியாக இம்மாதிரி மிகவும் பின் தங்கிய இடங்களில் அபிவிருத்தித் திட்டங்களைக் கொண்டுவர சர்க்கார் முன் வருமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : அம்மாதிரி நிகழ்ச் சிகள் அங்கு ஏற்படாது என்ற பூரண நம்பிக்கை எனக்கு இருக்கிறது. அது ஒருபுறமிருக்க, எல்லாப் பிற்போக்கான பகுதிகளையும் முன்னுக்குக் கொண்டுவருவதற்கு நடவடிக்கை எடுக்க சர்க்கார் ஏற்பாடு செய்துகொண்டி ருக்கிறது.

**SRI A. GOVINDASAMY** : அந்தப் பகுதியில் தேசிய அபி விருத்தித் திட்டம் வந்த பிறகு புதிதாக அமைக்கப்பட்ட பள்ளிகள் எத்தனை, வெட்டப்பட்ட கிணறுகள் எத்தனை என்று அரசாங்கத்தினிடம் கணக்கு இருக்கிறதா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : உடனடியாக என்னிடம் புள்ளிவிவரம் இல்லை. அதற்காக தனி கேள்வி கேட்டால் பதில் கொடுக்க முடியும்.

**MR. SPEAKER** : 102, 103, 104 ஆகிய இம்மூன்று கேள்விகளையும் ஒன்றாக எடுத்துக்கொள்ளலாம்.

### *Seed farms*

*** 102 *Q*.—SRI A. VEDARATHNAM** : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) விதைப்பண்ணைகள் ஏற்படுத்துவதற்காக எவ்வளவு நிலம் வாங்க உத்தேசம் ?

(ஆ) அந்த நிலங்களை வாங்க உத்தேசித்திருக்கும் இடங்கள் எவை ?

(இ) இந்த நிலங்களுக்கு கொடுக்க உத்தேசித்திருக்கும் கிறையம் எவ்வளவு ?

[9th September 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*), (*b*) & (*c*) The answer [a] is placed on the table of the House.

*** 103 *Q*.—SRI A. VEDARATHNAM :** கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இம் மாகாணத்தில் எத்தனை விதைப் பண்ணைகள் ஆரம்பித்து நடைபெறுகின்றன ?

(ஆ) இன்னும் அதிக விதைப் பண்ணைகளை ஆரம்பிக்கும் உத்தேச முண்டா ?

(இ) அப்படியானால், எங்கெங்கே ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 154 (one hundred and fifty-four) farms.

(*b*) Yes; it is the intention to open 206 more farms in the current year.

(*c*) It is obviously not possible now to say where the future farms will be located. They will be evenly distributed in the various districts according to the soil composition, irrigation and other facilities that are available and according to the seed crops that are to be grown.

*** 104 *Q*.—SRI T. VELUCHAMI :** கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

விவசாயிகளுக்கு பொறுக்கு விதைகளும் பூச்சி மருந்துகளும் கோவாப் பரேடிவ் ஸ்தாபனங்கள் மூலமாக சப்ளை செய்யும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The answer is in the affirmative.

SRI A. VEDARATHNAM : தஞ்சை ஜில்லாவிலே ஏற்படுத்தப் பட்டிருக்கும் இந்த விதைப் பண்ணைகளெல்லாம் வெட் ஏரியாவிலே, அதாவது நீர்ப்பாசன வசதியுள்ள இடங்களில்தான் ஏற்படுத்தப்பட்டிருக்கி கின்றன. அங்குள்ள ட்ரை ஏரியாவில் அதாவது பாசன வசதி இல்லாத மானாவாரிப் பிரதேசங்களில் ஏதேனும் விதைப் பண்ணைகள் உண்டா ? இல்லையானால், ஏற்படுத்தப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி தனியாக கேள்வி கேட்டால் பதில் அளிக்கமுடியும்.

SRI T. VELUCHAMI : இப்பொழுதிருக்கும் நிலைமையில் விவசாய டெமன்ஸ்ட்ரேடர்களுடைய வேலைப் பளுவைக் குறைப்பதாக இருந்தால், அவர்கள் விவசாய அபிவிருத்தி வேலைகளை மிகவும் நன்றாகக் கவனிக்க முடியும். கூட்டுறவு ஸ்தாபனங்களை அபிவிருத்தி செய்யவேண்டிய அவசி யம் கருதியும் விவசாய டெமன்ஸ்ட்ரேடர்களிடமிருந்து அதிக வேலை வாங் கக்கூடிய நிலைமை கருதியும், பொறுக்கு விதைகள், பூச்சி மருந்துகள் போன்றவைகளை கூட்டுறவு ஸ்தாபனங்கள் மூலமாக விநியோகம் செய்யும் முறையை சர்க்கார் கையாளுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பொறுக்கு விதைகளை கூட்டுறவு ஸ்தாபனங்கள் மூலம் விநியோகிப்பதுபற்றி இப்பொழுது கவனிக் கப்பட்டு வருகிறது. தேசிய வளர்ச்சித் திட்டங்களில் இரண்டு ப்ளாக்குகளில் இதைப் பரீட்சார்த்தமாக நிறைவேற்றிப் பார்க்கலாம் என்று இப்பொழுது ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், பூச்சி மருந்துகள் கொடுக்கும் விஷயத்திலே, அதைப்பற்றி கொஞ்சம் டெக்னிகலாக தெரிந்தவர்கள்

[a] Printed as Appendix II on page 482 infra.

9th September 1958]

வேண்டும். இதையும் கூட்டுறவு ஸ்தாபனங்களுக்கே கொடுத்துவிட்டால் அது அவ்வளவு திருப்திகரமாக நடைபெறுது என்ற அபிப்பிராயமும் இருக்கிறது. அதுவும் இப்பொழுது பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : I understand that there are two kinds of farms—single farms and twin farms. So far as the single farms are concerned, is it a fact that the Government have not sanctioned any staff for looking after these farms?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It is true that for single farms of 25 acres it was found that it would not be economical to have a Farm Manager. But recently the Government realized the necessity to have proper supervision of these farms and, therefore, they have sanctioned posts of Farm Managers even for these single farms.

SRI T. T. DANIEL : May I know from the Hon. Minister whether at present there are sufficient number of seed farms to meet the requirements of our State? If we have not got sufficient number of seed farms, what is the total acreage of seed farms we require? Have our Government fixed any target in this respect?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : As I pointed out originally, the idea was to have 360 seed farms of 25 acres each. But now with these 154 farms it has been possible to cover nearly 50 per cent of the acreage with pure seed farms. We are now reviewing the whole position so as to see whether we could not reduce our target so that whatever is required to cover the entire area, we might have seed farms only to that extent and not more.

SRI R. SRINIVASA IYER : எங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் பட்டியலில், விலை கொடுத்து விதைப் பண்ணைகளுக்காக நிலம் வாங்கப் பட்ட ஜாபிதா கொடுக்கப்பட்டிருக்கிறது. வருஷ குத்தகை ஏற்பாட்டுக்கு நிலம் வாங்கி, அங்கே விதைப்பண்ணைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனவா ? அப்படி குத்தகைக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட நிலத்தின் விஸ்தீரணம் என்ன ? வருஷவாரிக் குத்தகை ஏற்பாடு இருக்கும் இடங்களில் சராசரி எவ்வளவு குத்தகை கொடுக்கப்படுகிறது என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இருக்கும் 154 விதைப் பண்ணைகளிலே, இப்பொழுது விலைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது போக மீதியெல்லாம் குத்தகைக்குத்தான் இருக்கிறது. முதலிலே குத்தகை அடிப்படையிலே எவ்வளவு தூரம் திருப்திகரமாக இருக்கிறதென் பதைப் பார்த்து, அதற்குப்பிறகுதான் விலைக்கு எடுத்துக்கொள்ளவேண்டும். விலைக்கு எடுத்துக்கொள்ளவதும், ஒரு அளவு தான்எடுத்துக்கொள்ள வேண்டும் என்பது அபிப்பிராயம்.

SRI V. SUBBIAH : 154 பண்ணைகளில் கிரயம் செய்யாத நிலங்களுடைய மதிப்பைவிட கட்டுக் குத்தகையானது கூடுதலாக இருக்கிறதென்று கேள்விப் படுகிறேன். அப்படி யென்றால், எத்தனை இடங்களில் அப்படி இருக்கிறது என்று அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதெல்லாம் இப்பொழுது பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. நான் முன்பு குறிப் பிட்டதுபோல், சட்டசபையின் எஸ்டிமேட் கமிட்டி இதைப் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறது. அவர்களுடைய ரிபோர்ட் வந்ததும் அதற்குமேல் கவனம் செலுத்தப்படும்.

[9th September 1958

SRI T. SAMPATH : அரசாங்கம் நடத்திவரக்கூடிய சில விதைப் பண்ணைகளில் உற்பத்திசெய்கின்ற விதைகள் சரிவர முளைக்கவில்லை என்ற புகார் இருக்கிறது. அந்தப் புகார் அமைச்சரவர்களுக்குத் தெரியுமா? இந்தப் புகார் உண்மையாக இருந்தால், அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதுவரை அத்தகைய புகார் என்னிடம் வரவில்லை.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : விதைப் பண்ணைக்காக குத்தகைக்கோ, கிரயத்திற்கோ எடுத்துக் கொள்ளும் நிலங்கள் அங்கு சாகுபடி செய்யக் கூடிய வார சாகுபடியாளர்களுக்குக் குந்தகம் இல்லாமல் எடுத்துக் கொள்ளப்படுமா ? அதற்குத் தக்க பாதுகாப்பு இருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சிறிய சாகுபடி யாளர்களுக்குப் பாதகம் ஏற்படாத வகையில் தான் இது எடுத்துக் கொள்ளப்படுகிறது.

SRI P. U. SHANMUGAM : திருவண்ணுமலை தாலுக்காவில் உள்ள விதைப் பண்ணை இருக்கும் நிலத்தை கிரயத்திற்கு எடுத்துக்கொண் டாகிவிட்டதா ? அப்படியானால் அந்தக் கிரயம் என் இந்தப் பட்டியலில் கொடுக்கப்படவில்லை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தத் தகவல் என்னிடத்தில் இல்லை.

SRI A. VEDARATHNAM : அந்த விதைகள் எந்த முறையில் தயார் செய்யப்படுகிறது ? ஜப்பானிய முறையைக் கையாண்டால் ஒரு ஏக்கருக்குப் பத்து பவுண்டு விதை போதும் என்று கூறப்படுகிறதே. இந்த சிக்கனத்தால் 40 கோடி ரூபாய் விதையில் மாத்திரம் மிச்சம் கிடைக்கும் என்று சொல்லப்படுகிறதே. அந்த ஜப்பானிய முறையைக் கையாள்வது பற்றி பரிசீலனை செய்வார்களா என்று அறிய விரும்பு கிறேன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஜப்பானிய முறைபடி தான் இந்தப் பண்ணைகள் செயல்படுகின்றன.

SRI K. PONNIAN : தலைவர் அவர்களே, நெல் போன்ற தானியங் களுக்குத்தான் இந்த விதைப் பண்ணை இருப்பதாக அறிகிறேன். அன்னிய நாட்டுச் செலாவணியைத் தேடித் தருகிற காப்பி, தேயிலை, ஏலம் போன்றவைகளுக்கும் விதைப் பண்ணைகள் இருக்கின்றனவா ?

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் தனிக் கேள்விதான் போட வேண்டும். அமைச்சர் பதில் அளிப்பதாக இருந்தால் எனக்கு ஆட் சேபணை இல்லை.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அம்மாதிரி காப்பி, தேயிலை, ஏலம் போன்றவைகளுக்கு விதைப் பண்ணைகள் இல்லை.

*Sports Stadium*

* 105 *Q*.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether there is any sports stadium at Tiruchirappalli;

(*b*) whether any representation has been received from (i) The Tiruchirappalli United Cricket Club in 1957 and (ii) The Tiruchirappalli Municipal Council in February 1958, for the construction of a Cricket Stadium at Tiruchirappalli; and

(*c*) if so, the action taken thereon?

9th September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) There is no public sports stadium at Tiruchirappalli. The St. Joseph's College, Tiruchirappalli, owns a small sports stadium to be used by the College.

(b) No, Sir.

(c) Does not arise.

SRI S. LAZAR: Is it not a fact that a special grant is available from the Union Government for the purpose of establishing such a sports stadium and if so, will the Government consider the selection of Tiruchirappalli which is at the heart of Tamil Nad, for the purpose of establishing one such stadium?

THE HON. SRI C. SUBRAMANIAM: Yes, Sir, if the proposal comes from Tiruchirappalli, it will be considered.

*Hospitals.*

*106 *Q.*—SRI N. R. THIAGARAJAN: கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, தேனி, அல்லி நகரில் ஒரு ஆஸ்பத்திரி வைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: No, Sir.

SRI N. R. THIAGARAJAN: எங்கள் தேனி நகரத்தில் 20 ஆயிரம் மக்கள் இருக்கிறார்கள். சுற்றுப்புறத்திலும் இரண்டு லட்சம் இருக்கிறார்கள். ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டுமென்றால் பத்து மைல்கள் போகவேண்டியிருக்கிறது. சீக்கிரத்தில் அங்கே ஒரு ஆஸ்பத்திரியை அமைக்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: இது ஜில்லா போர்டினுடைய பொறுப்பாக இருக்கிறது. பஞ்சாயத்து ஏரியாவாக இல்லாத இடங்களில்தான் சர்க்கார் வைக்கும்.

* 107 *Q.*—SRI N. R. THIAGARAJAN: கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

ஒவ்வொரு மேஜர் பஞ்சாயத்து நகரிலும் 10 படுக்கைகள் கொண்ட ஆஸ்பத்திரி ஒன்றை வைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: No, Sir.

SRI N. R. THIAGARAJAN: இருபதாயிரம் மக்கள் கொண்ட பஞ்சாயத்து போர்டுகளில் ஆஸ்பத்திரிகளை அவசியம் ஏற்படுத்த வேண்டும். குறிப்பாக, கோம்பை, நெய்க்காரப்பட்டி, தேவதானப்பட்டி, ஆயக்குடி, தேனி முதலிய இடங்களில் ஆஸ்பத்திரிகள் வைப்பதைத் தனிக் கொள்கையாக அங்கீகரிக்கவேண்டுமென்று அரசாங்கம் முடிவு செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: இப்போது அரசாங்கம் ஒரு புதுக் கொள்கையை வகுத்திருக்கிறது. அதாவது ஸ்தல ஸ்தாபன நிர்வாகம் சம்பந்தமாக மாவட்ட வளர்ச்சி மன்றங்களை அமைக்க உத்தேசித்திருக்கிறோம். ஆஸ்பத்திரி ஏற்படுத்துவதுதான் அரசாங்கத்தின் பொறுப்பு. டிஸ்பென்சரி ஏற்படுத்துவது யூனியன் பொறுப்பாக இருக்கும்.

Sri A. V. P. ASAITHAMBI : விருதுநகரில் ஆஸ்பத்திரி நிறுவ ஒரு லட்சம் ரூபாய் நன்கொடையும், 6 ஏக்கர் நிலம் தருவதற்கும் முன் வந்திருக்கும்போது அங்கே ஆஸ்பத்திரியை அமைக்க சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : வைத்திய இலாகா அதிகாரிகள் இந்த இடத்தைச் சென்று பார்வையிட்டு வந்திருக்கிறார்கள் கூடிய சீக்கிரம் அதைப்பற்றி முடிவு எடுக்கப்படலாம்.

*Roads*

* 109 *Q.*—Sri K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether there is any proposal to convert the cart-track from Paramakudy town in the Ramanāthapuram district to Tiruchendur in the Tirunelveli district into a pucca metalled road?

The Hon. Sri P. KAKKAN : There is no regular cart-track from Paramakudy to Tiruchendur and the question of converting it into a pucca metalled road does not therefore arise.

Sri K. RAMACHANDRAN : இந்தப் பாதை திருச்செந்தூர் போவதற்கு நாற்பது, ஐம்பது மைல் குறைவாக இருக்கிறதென்றும், ஏற்கெனவே சர்வே செய்யப்பட்டிருக்கிறதென்றும் அறிகிறேன். அதை உடனடியாக எடுத்துச் செப்பனிடுவதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக் கொள்ளுமா ?

The Hon. Sri P. KAKKAN : பரமக்குடியிலிருந்து திருச்செந்தூர் போவதற்கு 91 மைல் ஆகிறது. இந்த 91 மைல்களையும் 6 பிரிவுகளாக எடுத்துக்கொண்டு வேலை நடைபெற்று வருகிறதென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

*Juvenile smoking*

*110 *Q.*—Sri S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to ban juvenile smoking?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : No, Sir.

*Engineering Colleges*

* 111 *Q.*—Sri T. T. DANIEL : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have constituted a Board for selection of candidates to the Engineering College in the State;

(*b*) who the members of the Board are; and

(*c*) whether there is any reservation of seats to be filled by the management of private colleges?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) Yes.

(*b*) (1) Sri G. R. Damodaran, Principal, P.S.G. College of Technology, Coimbatore.

(2) Sri V. P. Appadurai, Chief Engineer for Electricity, Madras.

(3) Sri A. S. Krishnaswamy, Principal, Government College of Technology, Coimbatore.

(c) Yes, 25 seats in each of the following private colleges are reserved to be filled up by the respective managements :—

(1) Thyagarajar Engineering College, Madurai.

(2) P.S.G. Colege of Technology, Peelamedu.

(3) Coimbatore Institute of Technology, Coimbatore.

(4) Alagappa Chettiar College of Engineering and Technology, Karaikudi.

SRI T. T. DANIEL : May I know from the Hon. Minister whether the managements of private colleges have absolute power in the matter of selection of candidates for the reserved seats or whether they should make the selection in consultation with the Board or the Government and also whether the Government have formulated any principles as to how they should make their selection?

THE HON. SRI C. SUBRAMANIAM : Formerly the entire number of students for these colleges were being selected by the respective colleges. Now in agreement with them, the Government have included as one pool 80 per cent of the strength of each private engineering college to be selected on a common basis. So far as the other 20 per cent is concerned, they are required to make the selection keeping in view the minimum standard required for admission into Engineering Colleges. There is no other restriction.

*Age-limit*

*112 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Government are aware of students below a certain age not being admitted in any college?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

SRI S. LAZAR : மற்ற பல்கலைக் கழகங்களில் இதுபோன்ற ஒரு நிலை இல்லாத காரணத்தால் இங்குள்ள திறமையானவர்கள் அங்கே சேர்ந்து படிக்க வேண்டிய நிலைமை எற்படுகிறது. நாமும் அவர்களைப் போல் வயது தடையை இங்கே மாற்றி அமைக்கவேண்டும் என்கிற யோசனையை பல்கலைக் கழகத்திற்கு சர்க்கார் தெரிவிப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்தமாதிரி வயது விதி வைத்திருப்பது சரி என்று இப்போது எல்லோரும் கருதுகிறார்கள். ஆகையால் மற்ற பல்கலைக்கழகங்களில் சீக்கிரத்திலேயே இந்த வயது விதியை எற்றுக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

SRI K. VINAYAKAM : Sir, the present age-limit for admission to any Arts College in our Universities is 15 years . . .

SRI P. G. KARUTHIRUMAN : Fourteen years and six months.

[9th September 1958

MR. SPEAKER : The hon. Member is not sure about the number of years.

SRI K VINAYAKAM : Sir, it is 14½ years. The result is, parents are tempted to get exemption from the authorities concerned. Therefore, will the Government issue instructions to the University of Madras to relax the age-limit in view of the high standard of knowledge that has been obtained by the rising generation when compared to the old generation to which most of us belong?

THE HON. SRI C. SUBRAMANIAM : The age-limit is fourteen years and six months as on the 15th of July of the year in which they seek admission to courses of study. But so far as the relaxation is concerned, to my knowledge, no relaxation has been granted so far by the University Authorities.

SRI A. GOVINDASAMY : இங்கே எஸ்.எஸ்.எல்.ஸி. பரீட்சை எழுதுகிற நேரத்தில் வயது குறைந்திருந்தாலும் எக்ஸம்ஷன் கொடுத்து அனுமதிக்கிறார்கள். பாஸ் செய்கிறவர்களுக்கு "They are eligible for admission to University Course" என்று சர்டிபிகேட் கொடுக்கிறார்கள். ஆனால் இவர்கள் காலேஜுக்குப் போகும்போது வயது தடை விதிக்கக் காரணம் என்ன ? இங்கேயும் இவர்களுக்கு எக்ஸம்ஷன் கொடுப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அங்கே பரீட்சையில் நல்ல மார்க் வாங்கியிருப்பதற்காக 'காலேஜில் சேர்ந்து படிக்கத் தகுதி உடையவர்கள்' என்று சர்டிபிகேட் கொடுக்கப்படுகிறது. இங்கே மார்க்குகளும் வாங்கியிருக்க வேண்டும், வயதும் அடைந்திருக்க வேண்டும். அப்போது தான் இங்கே ஒப்புக்கொள்வார்கள். ஆகவே இதற்கும் அதற்கும் முரண்பாடு கிடையாது.

*Salaries of doctors in rural dispensaries*

* 113 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether the Government have received any proposal from the North Arcot District Board Advisory Committee for the increase in the salaries of doctors in rural dispensaries; and

(b) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes. A proposal for the increase of subsidy paid to Rural Medical Practitioners was received.

(b) The proposal could not be sanctioned owing to the difficult financial position of the district board.

SRI A A. RASHEED : Sir, do the Government realise that it is impossible to get doctors below Rs. 100 per month?

THE HON. SRI M. A. MANICKAVELU : These are rural medical practitioners, and they are also allowed to do private practice.

9th September 1958]

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இப்போது கிராமாந்திர டிஸ்பென்ஸரிகளுக்கு மருந்துகள் மிகக் குறைவாகக் கொடுக்கப்படுகின்றன. இனிமேல் கிராமாந்திர வைத்தியசாலைகளுக்கு மருந்துகளை அதிகமாகக் கொடுத்து, கிராம மக்களுக்கு போதிய வைத்திய வசதி செய்து கொடுக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

MR. SPEAKER : மூலக் கேள்வி டாக்டர்களின் சம்பளத்தைப் பற்றியது. மருந்துகளைப் பற்றி நீங்கள் உப கேள்வி போட்டிருக்கிறீர்கள். இதற்கு கனம் அமைச்சர் எப்படி பதில் சொல்ல முடியும் ? கனம் அமைச்சர் பதில் சொல்வாரானால், எனக்கு ஆட்சேபணை இல்லை.

THE HON. SRI M. A. MANICKAVELU : மூலக் கேள்வி மருந்துகளைப்பற்றியது அல்ல.

SRI D. S. AUTHIMOOLAM : எல்லா ஜில்லாக்களிலுள்ள கிராமாந்திர ஆஸ்பத்திரிகளுக்கு அதிக ஸப்ஸிடி கொடுக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கை சென்ற பத்து வருஷ காலமாக இருந்து வருகிறது. அப்படியிருக்கும்போது, இந்த ஸப்ஸிடியை அதிகப்படுத்த வேண்டுமென்று சர்க்கார் தீவிரமாக எண்ணுகிறதா, இல்லையா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அவ்வாறு சர்க்கார் எண்ணுவதுமட்டும் போதாது, ஜில்லா போர்டுகளும் அவ்வாறு எண்ணினால்தான் அதிக ஸப்ஸிடி கொடுக்க முடியும்.

SRI P. S. CHINNADURAI : போதிய சம்பளம் கொடுக்கப்படாததால் கிராமங்களுக்குச் செல்வதற்கு டாக்டர்கள் முன் வராமல் இருக்கிறார்கள் என்பது தங்களுக்குத் தெரிந்திருந்தும், அரசாங்கத்தார் பணம் இல்லை என்ற காரணத்தைக் காட்டி அவர்களுடைய சம்பளத்தை அதிகரிக்கத் தயங்குவது, கிராம மக்களுக்கு நன்மை செய்வதாகுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கிராமாந்திர டாக்டர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளம் போதுமானது அல்ல என்பது இப்போதைய பிரச்னை. இந்தக் குறைவை நீக்குவதற்கு யோசனை செய்யப்பட்டு வருகிறது. ப்ரைமரி ஹெல்த் ஸெண்டர்களிலுள்ள டாக்டர்களுக்கு முன்பு 50 ரூபாய் "நான்-ப்ராக்டிஸ் அலவன்ஸ்" கொடுக்கப்பட்டு வந்தது. இப்போது அந்த அலவன்ஸை 100 ரூபாயாக உயர்த்தியிருக்கிறோம். பிரச்னையைத் தீர்ப்பதற்காக காரியங்களை இம்மாதிரி கொஞ்சம் கொஞ்சமாகச் செய்து வருகிறோம்.

SRIMATHI A. S. PONNAMMAL : கிராமங்களில் உள்ள ஆஸ்பத்திரிகளில் வேலைபார்க்கும் டாக்டர்கள் கிராம மக்களிடமிருந்து பணம் வாங்கிக் கொள்கிறார்கள் என்று புகார் செய்யப்படுகிறது. கிராம ஆஸ்பத்திரி டாக்டர் ஒருவர் அம்மாதிரி பணம் வாங்கியதாக என்னிடம் புகார் செய்யப்பட்டதன்பேரில் நான் அவரை அதுபற்றி விசாரித்ததற்கு, அவர் "நாங்கள் என்ன செய்வோம் ? எங்களுக்கு பிள்ளை குட்டிகள் அதிகமாக இருக்கின்றன. எங்களுக்கு இன்னும் கொஞ்சம் அதிகம் சம்பளம் கொடுக்கப்பட்டால், இம்மாதிரி மக்களிடமிருந்து பணம் வாங்கமாட்டோம்" என்று சொன்னார். எனவே, கிராமாந்திர டிஸ்பென்ஸரிகளிலுள்ள டாக்டர்களுக்கு இன்னும் 25 ரூபாயாவது அதிகமாகச் சம்பளம் கொடுக்கப்படுமானால், நான் அந்த டாக்டர்கள் சார்பில் அரசாங்கத்திற்கு நன்றி செலுத்துவேன் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : அப்படிக் கூறிப் பிரயோஜனம் இல்லை. "இது பற்றி அரசாங்கம் யோசிக்குமா ?" என்று கேள்வி போடுங்கள். (சிரிப்பு.)

## *Salaries and Allowances*

* 114 *Q*.—SRI P. G. MANICKAM : கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கவர்ன்மெண்டு ஆஸ்பத்திரிகளிலே வேலை செய்யும் கடைநிலை ஊழியர்களான தோட்டிகளுக்கு (வார்டுகளைச் சுத்தம் செய்பவர்களுக்கு) எந்த அடிப்படையில் சம்பளம், அலவன்ஸ் கொடுக்கப்படுகின்றன ?

[9th September 1958

**THE HON. SRI M. A. MANICKAVELU : The scale of pay and allowances for the toties in the Government hospitals have been fixed with reference to the nature and responsibilities attached to their posts.**

SRI S. B. ADITYAN : சென்னை சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் வேலை செய்யும் ஊழியர்களுக்கு வாரத்திற்கு ஒரு நாள் ஓய்வு கொடுக்கப் படவேண்டும் என்று அரசாங்கம் 1950-ம் வருஷம் உத்தரவிட்டது. அந்த உத்தரவு சரிவர அமல் நடத்தப்படும் என்று கனம் அமைச்சர், சென்ற ஆண்டு இந்த சபையில் உறுதி கூறினார். ஆனால், சென்னை நகரிலுள்ள ஜெனரல் ஆஸ்பத்திரியில் வேலை செய்யும் கடைநிலை ஊழி யர்களுக்கு அந்த உத்தரவின்படி கொடுக்கப்பட வேண்டிய ஓய்வு இன்று வரையில் கொடுக்கப்படுவதில்லை. இதை கனம் மந்திரி அருள்கூர்ந்து கவனிப்பாரா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஆஸ்பத்திரிகளில் வேலை செய்யும் தோட்டிகள் முதலிய ஊழியர்களைப்பற்றியது மூலக் கேள்வி. அந்த ஊழியர்கள் "கண்டிஜ்ஜெண்ட் எஸ்டாப்ளிஷ்மெண்ட்"-ல் இருந்து வந்தார்கள். இப்போது அவர்கள் "ரெகுலர் ஸெர்விஸில்" எடுத்துக் கொள்ளப்பட்டு, லீவ், அலவன்ஸ் முதலிய சலுகைகள் கொடுக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு குடக்கூலி அலவன்ஸும் கொடுக்கப்படுகிறது. ஆகையால் அவர்களுடைய நிலை முன்பு இருந்ததைவிட ஓரளவு இப்போது உயர்ந்திருக்கிறது. மற்றப்படி, அவர் களுக்கு இன்னும் சலுகைகள் கொடுக்கப்பட வேண்டும் என்று கூறப் படுமானால், அது சம்பந்தமாக எந்த உறுதி மொழியும் கூறுவதற்கு இப்போது நான் தயாராக இல்லை.

SRI S. PAKKIRISAMI PILLAI : சர்க்கார் ஆஸ்பத்திரிகளி லுள்ள தோட்டிகள் இப்போது முழுநேர ஊழியர்களாக இருக்கும்போது, அவர்களுக்குக் கிடைக்கும் மொத்த மாத வருமானம் எவ்வளவு ? அத்தகைய ஊழியர்களின் குறைந்தபட்சச் சம்பளம் (தொழில்) கோர்ட்டு களால் நிர்ணயிக்கப்பட்டிருக்கும்போது, அரசாங்கத் தோட்டிகளுக்கு அந்த அளவைவிடக் குறைவாக சம்பளம் கொடுக்கப்படுமானால், அதை ஒரு பெரிய குற்றமாக அரசாங்கத்தார் கருதவில்லையா ? அப்படிப்பட்ட குற்றம் செய்யப்படாமலிருப்பதற்கு அரசாங்கத்தார் உடனடியாக நட வடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது, "மாக்ஸிமம் டைம்-ஸ்கேல்" சம்பளத்தை அடைந்தவர்களுக்கு, நகரத்தில் 57 ரூபாயும் நகரத்திற்கு வெளியில் 53 ரூபாயும் மாதச் சம்பளம் கிடைக் கிறது.

SRI S. NAGARAJA MONIGAR : "தமிழர்கள் வாழ வேண் டும், நாம் தமிழர், நம் தமிழர்கள் முன்னுக்கு வர வேண்டும்" என்று சொல்லப்பட்டு வரும் இந்தக் காலத்தில், ஆஸ்பத்திரிகளில் கீழ்த் தர வேலை செய்யும் ஊழியர்களில் பெரும்பான்மையோர் வடக்கத்தியர்கள் என்பதும் அவர்கள் தெலுங்கு பேசுபவர்கள் என்பதும் சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அவர்கள் தெலுங்கு பேசினாலும் பச்சைத் தமிழ் நாட்டில் தான் வசிக்கிறார்கள். (சிரிப்பு.)

SRI M. JAGANNATHAN : சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் வேலை செய்யும் கடைநிலை ஊழியர்கள் சங்கத்திடமிருந்து, அவர்களுடைய சம் பளத்தை உயர்த்தக் கோரி, சர்க்காருக்கு ஏதாவது மனு வந்திருக்கிறதா ? அப்படி வந்திருந்தால், அதன்பேரில் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத் திருக்கிறார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : சம்பள உயர்வு கோரி நிறைய மனுக்கள் வருகின்றன. ஆகையால், கனம் அங்கத்தினர் குறிப் பிட்ட மனு வந்ததா, இல்லையா என்று நான் கவனிக்கவில்லை. (சிரிப்பு.)

9th September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, before the discussion proceeds further I would like to move a few formal amendments which I think are necessary. In sub-clause (1) (*c*) of clause 4, the word ' all ' occurring in line 38 may be omitted, as that word is not necessary there. In the same sub-clause the words ' whether the person so chosen is himself a president of a panchayat or not ' occurring in lines 39 and 40 are also unnecessary and may be omitted because it is quite explicit. The words used in the clause in the earlier portion is ' a person chosen ' and therefore there is no limitation placed on the person to be chosen. The proviso also makes that clear, namely, ' provided that no person shall be so chosen unless his name appears in the electoral roll for any of the panchayats in the area '. Therefore, I move—

" In sub-clause (1) (*c*), omit the word ' all ' occurring in line 38 and the words ' whether the person so chosen is himself a president of a panchayat or not ' occurring in lines 39 and 40."

Then in sub-clause (3) (*b*), the last sentence, namely, ' A decision once made and intimated to the District Collector shall be final and shall not be liable to be modified ' may be omitted as I do not think that such a rigidity is necessary in respect of the choice of a place. Therefore I move—

" In sub-clause (3) (*b*), *omit* the last sentence, viz., ' A decision once made and intimated to the District Collector shall be final and shall not be liable to be modified '. "

*SRI S. M. ANNAMALAI : சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்த மன்றத்தில் பேசிய நிதி அமைச்சர் அவர்கள் "சட்ட மன்ற உறுப்பினர்களுக்குத்தான் அமைச்சர்களை விட மதிப்பு அதிகம்" என்று நேற்றைய தினம் சொன்னார்கள். ஆனால், நான் இந்தப் பிரிவு விவாதத்திலிருக்கும் பொழுது சொல்ல ஆசைப்படுவது என்னவென்றால், கலெக்டர் அவர்களை இந்த அபிவிருத்தி சபைக்குத் தலைமை தாங்கும்படிச் சொல்வது நீதி ஆகாது என்பதுதான். இதற்கு ஓர் உதாரணத்தை மட்டும் எடுத்துச் சொல்கிறேன். சென்ற வட ஆற்காடு மாவட்ட அட்வைஸரி கமிட்டிக் கூட்டத்தில் கலெக்டர் அவர்கள் தலைமை தாங்கினார்கள். நான் ஏதோ இரண்டு கேள்விகளைக் கேட்டேன். கேட்டதும், உடனே கூட்டத்தை முடித்து விட்டு வெளியே போய்விட்டார். சட்ட மன்ற உறுப்பினர்கள் அவரை பேட்டி காணவேண்டுமென்று தெரிவித்தும் கூட, பேட்டி காண்பதற்கு அனுமதி தரவில்லை. ஆகவே மாவட்ட கலெக்டர் சட்டமன்ற உறுப்பினர்களிடம் எந்த அளவுக்கு மதிப்பு வைத்திருக்கிறார் என்பதை கனம் நிதி அமைச்சர் அவர்கள் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். தவிர, கலெக்டர் அவர்கள் தலைமை தாங்கவேண்டுமென்று சொன்னால், கலெக்டரே கூட்டம் கூட்டினால்தான் நடக்கும். வட ஆற்காடு மாவட்ட கலெக்டர் "நான் இன்னும் வேலையிலிருக்கப் போவது நாலைந்து மாதங்கள்தான். நீங்கள் யாரும் என்னை ஒன்றும் செய்யமுடியாது", என்று திட்டவட்டமாகக் கூறுகிறார்.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, with great respect to the hon. Member I do not think the conduct of individual officials call for comment as far as this clause is concerned. Therefore, I would respectfully submit that it would be better to avoid references to a particular officer because if I have to say in reply why a particular treatment was offered to a particular member then it will lead to very great embarassment even to the hon. Member himself.

MR. SPEAKER : In this House it has been agreed that officers could be criticized because Hon. Ministers can defend them at a later stage. The convention is that only those who are not in the House and whom no one here can defend should not be criticized That is the accepted rule and practice followed by my predecessor also.

THE HON. SRI C. SUBRAMANIAM : At the proper moment we can criticise and discuss the actions of officers. But is this the time, Sir, I am asking, to say that a particular Collector treated the hon. Member in a particular way. I know the reason, I can give the reason why he was trated like that but it will not add to the credit of the hon. Member.

MR SPEAKER : ஸ்ரீ சுப்ரமணியம் அவர்கள் தனிப்பட்ட ஒரு கலெக்டரைப் பற்றி புகார் கூறுவது அவ்வளவு நல்ல தல்ல, ஆகவே புகார் கூறவேண்டாம் என்று அப்பீல் செய்துகொள்கிறார். ஏனென்றால், அதற்குப் பதில் சொல்லும்பொழுது, அங்கத்தினரைப் பற்றியே பேசக் கூடிய நிலைமை ஏற்படலாம். பொதுவாகப் பேசலாமே தவிர, ஒரு தனிப்பட்ட அதிகாரியைப் பற்றியோ, ஒரு கலெக்டரைப் பற்றியோ குறிப்பிட்டுப் பேசுவது அவ்வளவு நல்லதல்ல என்று தோன்றுகிறது. சட்டப் பிரகாரம் பேசக்கூடாது என்று நான் சொல்ல முடியாது. இப்பொழுது பேசினால், அமைச்சர் பதில் சொல்லும்பொழுது அவர் சொல்லுவதையும் கேட்டுக்கொள்ளத் தயாராயிருக்க வேண்டும்.

* SRI A. GOVINDASAMY : ஏதோ ஒரு கலெக்டருடைய தனிப்பட்ட குறைகளை எடுத்துச் சொன்னால், அவற்றைச் சொல்லக்கூடாது என்று சொன்ன நிதி அமைச்சர் அவர்கள், உறுப்பினரைப் பற்றி தவறான அர்த்தம் படும்படி இங்கே குறிப்பிட்டது முறையா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : வற்புறுத்தினால் அதைப் பற்றிச் செ.ால்வதற்கு நான் தயாராயிருக்கிறேன்.

MR. SPEAKER : கலெக்டர் Chairman ஆக இருக்கலாமா, கூடாதா என்ற பிரிவை விவாதித்துக் கொண்டிருக்கும்பொழுது, தனிப்பட்ட குறைகளைச் சொல்வதற்கு இடமில்லை. கனம் மந்திரி அவர்கள் பதில் சொல்லும்பொழுது "பாயின்ட் ஆப் ஆர்டர்" வரும். என் இந்த சண்டை சச்சரவு? ஆகவே இவற்றை எல்லாம் சொல்லாமலிருந்தால் நன்றாக இருக்கும்.

* SRI S. M. ANNAMALAI : நான் ஒரு குறிப்பிட்ட கலெக்டரின் மரியாதையைக் குறைக்கவேண்டுமென்பதற்காகப் பேசவில்லை சட்டமன்ற உறுப்பினர்களிடத்தில் கலெக்டருக்கு என்ன மதிப்பு இருக்கிறது என்பதைப் பற்றித்தான் பேச விரும்புகிறேன். உண்மையில் அவரைத் தாக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு நான் பேசவில்லை. மாவட்ட கவுன்ஸிலுக்கு ஒரு பாராளுமன்ற உறுப்பினரோ, ஒரு சட்டமன்ற உறுப்பினரோ தலைமை தாங்கவேண்டுமென்ற எனது திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன்.

10–40 a.m. SRI M. KALYANASUNDARAM : என்னுடைய திருத்தத்தின் நோக்கத்தை அநேகமாக நிதி அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொண்டுவிட்டார் என்று கருதுகிறேன். பார்லிமெண்டு அங்கத்தினர்கள் அவர்களுடைய தொகுதி ஒன்றுக்கு மேற்பட்ட ஜில்லாக்களில் பரவியிருக்கக்கூடிய சமயத்தில் ஒரு முறை எந்தக் குழுவில் அங்கம் வகிக்கலாம் என்பது அதை தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு மாற்றக்கூடாது என்று இருந்த நிலைமையை மாற்றி அமைச்சர் அவர்கள் இப்பொழுது ஒரு திருத்தத்தைக் கொடுக்க இசைந்துள்ளதால், என்னுடைய திருத்தத்திற்கு அவசியமில்லை என்று கருதுகிறேன்.

* SRI A. GOVINDASAMY : பாராளுமன்ற உறுப்பினருடைய தொகுதி இரண்டு, மூன்று ஜில்லாக்களில் பரவியிருக்கக்கூடிய காரணத்தினாலே, அவர்களுடைய தொகுதி எந்தெந்த ஜில்லாக்களில் பரவியிருக்

9th September 1958] [A. Goviudasamy]

றதோ அந்த அந்தக் கவுன்சில்களில் அவர்கள் அங்கம் வகிக்க வேண்டுமென்பது என்னுடைய திருத்தம். இதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொள்ளுவதில் தகராறு ஒன்றும் இருக்காது என்று நினைக்கிறேன்.

* **Sri S. NAGARAJA MONIGAR** : நான் என்னுடைய திருத்தத்தை வற்புறுத்தவில்லை.

* **Sri A. GOVINDASAMY** : நான் என்னுடைய திருத்தத்தை வற்புறுத்துகிறேன். அதை ஏற்றுக்கொள்ளுவதில் சங்கடம் ஒன்றுமில்லை என்று அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். ஆகையால் என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

Sri S. NAGARAJA MONIGAR : I want to know what the Hon. Minister has to say on my amendment.

Mr. SPEAKER : The hon. Member should say whether he is withdrawing the amendment or not.

Sri S. NAGARAJA MONEGAR : I withdraw my amendment.

The amendment of Sri S. Nagaraja Monigar was, by leave, withdrawn.

Mr. SPEAKER : The following are the Government amendments :—

" In sub-clause (1) (c) " *omit* the word ' all " occuring in line 38 and the words ' whetehr the person so chosen is himself a president of a panchayat or not ' occurirng in lines 39 and 40. "

" In sub-clause (3) (b), *omit* the last sentence, viz.. ' A decision once made and intimated to the District Collector shall be final and shall not be liable to be modified'. "

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, before the amendments are put to vote, I would like to say a few words on the amendments.

Mr. SPEAKER : Yes, the Hon. Minister can speak on the amendments.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : முதலிலே, ஸ்ரீ ராமசுவாமி பிள்ளை அவர்கள் 6 மாதங்களுக்குள் இந்தக் கருன்சில்கள் அமைக்கப்பட வேண்டுமென்ற ஒரு திருத்தத்தை கொடுத்திருக்கிறார். இதற்கு அவசியமில்லை. ஆறு மாதங்களுக்குள் இதைச் செய்ய வேண்டுமென்பதுதான் சர்க்காரின் நோக்கம். ஆகவே இதில் காலவரை ஒன்றும் நிர்ணயிக்க வேண்டிய அவசியமில்லை.

அடுத்தப்படியாக ஸ்ரீ சம்பத் அவர்கள் " எக்ஸ்–அபிஷியோ மெம்பர் " என்ற திருத்தத்தை வற்புறுத்தவில்லை.

ஸ்ரீ நாகராஜ மணிகார் கொடுத்திருக்கும் திருத்தத்தை ஒத்துக்கொள்ளுவதில் கஷ்டம் என்னவென்று சொன்னால், இப்பொழுது நாம் ராஜ்ய சபை அங்கத்தினர்களுக்கும், மேல்சபை அங்கத்தினர்களுக்கும் இந்த கவுன்சில்களில் அங்கம் வகிப்பதற்கு உரிமை கொடுத்திருக்கிறோம். அசெம்பிளியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் மேல் சபையில் இருக்கிறார்கள். ராஜ்ய சபை அங்கத்தினர்கள் எல்லோரும் அசெம்பளியி

விருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். அவர்களுக்குத் தனிப்பட்ட தொகுதி ஒன்றுமே கிடையாது. அசெம்பளியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட மேல் சபை அங்கத்தினர்களும், ராஜ்ய சபை அங்கத்தினர்களும் இந்த கவுன்ஸில்களில் அங்கம் வகிக்க முடியாமல் ஒதுக்கி வைக்கப்பட வேண்டுமென்பது இச்சபையினுடைய நோக்கமாக இருக்காது என்று நினைக்கிறேன். ஆகவேதான், இந்தத் திருத்தத்தை நான் ஒப்புக்கொள்ள முடியவில்லை.

அடுத்தப்படியாக, ஸ்ரீ சம்பத் அவர்கள் பிரிவு 4 (1) (ஸி)-க்கு கொடுத்திருக்கும் திருத்தத்தை ஒரு சிறிய திருத்தத்துடன் ஒப்புக் கொள்ளுகிறேன்.

ஸ்ரீ ராமலிங்கம் அவர்கள் கொடுத்திருக்கும் திருத்தத்தை ஒப்புக் கொள்ளுகிறேன். அது மிகவும் நல்ல யோசனை. இதை சர்க்கார் ஏற்றுக் கொள்ளுகிறது. மற்ற அங்கத்தினர்கள் பரிசீலனை செய்துபார்த்த சமயத்தில், இது தோன்றவில்லை. அதனால்தான் கூட்டுறவு செண்டிரல் பாங்கு தலைவர்களை சேர்க்கவில்லை. அப்பொழுதே இந்த யோசனை தோன்றியிருந்தால், நாங்கள் அவர்களையும் சேர்த்திருப்போம். இந்தத் திருத்தத்தைக் கொண்டுவந்ததற்கு ஸ்ரீ ராமலிங்கம் அவர்களுக்கு நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

அடுத்தப்படியாக பிரிவு 4 (1) (எப்) என்பதைப் புதியதாகச் சேர்க்க வேண்டுமென்று ஸ்ரீ நாகராஜ மணிகார் கொடுத்திருக்கும் திருத்தத்தை அவர் வற்புறுத்தவில்லை. அதற்கு என்ன அர்த்தம் என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

கடைசியாக, இந்தக் கவுன்சில்களுக்கு சேர்மன் அங்கத்தினர்களாலேயே தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்ற திருத்தத்தை ஸ்ரீ ராமசுவாமி பிள்ளையும், ஸ்ரீ எஸ். எம். அண்ணாமலையும் கொடுத்திருக்கிறார்கள். இதிலே இரண்டு விதமான கருத்துக்கள் இருக்கமுடியும் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். இந்த இரண்டு கருத்துக்களும் நன்றாகப் பரிசீலனை செய்யப்பட்டன. இந்தக் கருத்துக்களை நன்றாக அலசி ஆராய்ந்து பார்த்தபிறகுதான் இந்தக் கவுன்சில்கள் நல்ல முறையிலே நடக்க வேண்டுமென்று சொன்னால் கலெக்டர்களை தலைவர்களாகக் கொண்டு நடத்துவதுதான் நல்லது என்ற முறையில் எல்லா கட்சிப் பிரதிநிதிகளும் கொண்ட குழு ஏகமனதாக முடிவுக்கு வந்தது. ஸ்ரீ ராமசுவாமி பிள்ளை அவர்கள், உப தலைவராக இருக்கக்கூடியவர். அவருடைய தலைவர் செய்த தீர்மானத்திற்கு கொஞ்சமாவது மதிப்பு வைக்கவேண்டும். அவர்களுடைய கட்சியின் கட்டுப்பாட்டைப் பற்றி நான் சொல்லுவதற்கு வரவில்லை. தலைவர், உப தலைவர் என்று இருக்கும் பொழுது, கொஞ்சம் சம்பிரதாயத்தையொட்டி தலைவருடைய கருத்திற்குக் கொஞ்சம் மதிப்புக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். எல்லா அங்கத்தினர்களும் இதைப் பற்றி பேசியதாகச் சொன்னார்கள். நாம் பேசியதற்கு பிற்பாடு எல்லா அங்கத்தினர்களும் கலெக்டர் தலைமை வகிப்பதே சரி என்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

**Sri A. GOVINDASAMY :** இல்லை, இல்லை.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அப்படி ஒரு கருத்து இருக்கிறது என்பதை நானே ஒப்புக்கொள்ளுகிறேன். அம்மாதிரி ஒரு கருத்தை வெளியிட்டாலும், கடைசியிலே இது சரிதான் என்று எல்லோரும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். எல்லாக் கட்சி பிரதிநிதிகளையும் கொண்ட குழு இது விஷயத்தில் ஏகமனதாக ஒரு முடிவுக்கு வந்திருக்கிறது. அப்படி இந்தக் குழு இந்தக் கருத்துக்களைப் பரிசீலனை செய்து பிறகு ஒரு ஏக மனதான முடிவுக்கு வந்தபின்பும், எல்லாக் கட்சிப் பிரதிநிதிகள்கொண்ட குழு செய்த அந்த முடிவு அப்படியே இருக்கட்டும், மறுபடியும் இதை விவாதிப்போம், வோட்டு வேண்டுமானாலும் எடுப்போம் என்ற நிலைமை வருமேயானால், இம்மாதிரி எல்லாக் கட்சி பிரதிநிதிகளையும் கொண்ட ஒரு குழு முதலில் இதையெல்லாம் பரிசீலனை செய்து முடிவு எடுக்கவேண்டிய

9th September 1958] [Sri C. Subramaniam]

அவசியமில்லாமல் போய்விடும். இதிலே இரண்டு கருத்துக்கள் இருக்க முடியும். இவைகள் பரிசீலனை செய்யப்படாவிட்டல் சரி, ஆனால், இரண்டு கருத்துக்களும் பரிசீலனை செய்யப்பட்டு ஏகமனதாக ஒரு முடிவுக்கு வந்திருக்கும்போழுது, தங்கள் கருத்தை விட்டுக்கொடுக்கும் முறையிலே நடந்து கொண்டால், இந்தச் சபை மேலும் மேலும் இந்தத் துறையிலே, அதாவது எல்லாக் கட்சிகளையும் ஆலோசனை செய்து ஒரு முடிவு செய்யவேண்டுமென்கிற பாதையிலே முன்னேறிச் செல்லுவதற்கு மிகவும் உதவியாக இருக்கும் என்பதை வற்புறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மற்றொரு கருத்தும் நன்றாக ஆலோசனை செய்து பார்க்கப்பட்டிருக்கிறது. அது பற்றி கவனம் செலுத்தவேயில்லை என்று சொன்னால் குறை கூறவேண்டியது அவசியம். மாறுபட்ட கருத்துக்குப் போதுமான அளவு முக்கியத்துவம் கொடுத்து அது பற்றி ஆலோசனை செய்து, ஒரு கூட்டத்தில் அல்ல, இரண்டு கூட்டங்களில் ஆலோசனை செய்து கடைசியாக ஏகமனதாக ஒரு முடிவு செய்திருக்கக்கூடிய விஷயம் இது. ஆகவே, 'தன்னுடைய கருத்தைத் தான் வற்புறுத்துவேன்' என்ற முறையில் இல்லாமல், மற்றவர்களுடைய கருத்துக்கும் இடம் கொடுத்து ஏகமனதாக நிறைவேற்றிய இந்த முடிவை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று நான் வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : அந்தக் குழுவில் ஒரு அங்கத்தினரும் இதை ஆட்சேபிக்கவில்லையா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சில அங்கத்தினர்கள் ஆட்சேபித்தார்கள். இரண்டு கருத்துக்களும் இருந்தன. ஆனால் எது நல்லது என்பதைப் பற்றி பரிசீலனை செய்து இந்த முடிவு ஏகமனதாகச் செய்யப் பட்டது.

மற்ற திருத்தங்களைப் பற்றி நான் அதிகமாகச் சொல்லவேண்டியது அவசியமில்லை.

ஸ்ரீ கோவிந்தசாமி அவர்கள் பார்லிமெண்டு அங்கத்தினர்களைப் பொறுத்தவரையிலும், அவர்களுடைய தொகுதி எந்த அளவிற்கு இருக்கிறதோ, அதிலே இருக்கக்கூடிய டெவலெப்மெண்டு கவுன்சில்களில் அங்கம் வகிக்கலாம் என்று கருத்தில் ஒரு திருத்தத்தைக் கொடுத்திருக்கிறார்கள். பட்டதாரிகள் தொகுதி இருக்கிறது. அது நம்முடைய ராஜ்யம் முழுவதும் சேர்ந்த தொகுதி. ஆகவே பட்டதாரி தொகுதியில் தேர்ந்தெடுக்கப்பட்ட மேல்சபை அங்கத்தினர்கள் இந்த ராஜ்யத்தில் இருக்கக்கூடிய எல்லா கவுன்சில்களிலும் அங்கத்தினர்களாக இருக்கவேண்டிய நிலைமை ஏற்படும். பார்லிமெண்டு அங்கத்தினர்கள் . . .

(ஸ்ரீ எம். கலியாணசுந்தரம் தன்னுடைய இடத்தை விட்டு எழுந்திருந்தார்.)

MR. SPEAKER : Let not the hon. Member interrupt the speech of the Hon. Minister. The hon. Member has already had his say in the matter.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதேமாதிரி மேல்சபையில் ஸ்தல ஸ்தாபன தொகுதி இருக்கிறது. ஒரு தொகுதி மூன்று ஜில்லாக்கள் சேர்ந்தது. அவர்கள் மூன்று ஜில்லாக்களிலுமுள்ள கவுன்சில்களில் அங்கம் வகிக்கவேண்டியிருக்கும். எந்த முறையிலே தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்பதைப்பற்றிய பிரச்னையே தவிர, தொகுதியைப்பற்றி பிரச்னை இல்லை. இதுபற்றி எல்லாம் ஆலோசனை செய்து பார்க்கப்பட்டது. ஒரு கவுன்சிலுக்கு மேல் அங்கத்தினராக இருந்தால் நல்ல முறையிலே அதில் பங்கு எடுத்துக்கொண்டு பணியாற்றமுடியுமா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். இந்தக் கவுன்சில்களில் அங்கம் வகிப்பது ஒரு கௌரவம் அல்ல. இந்த கவுன்சில்கள் மூன்று மாதங்களுக்கு ஒரு தடவை கூடுவதற்குப் பதிலாக, இரண்டு மாதங்களுக்கு ஒரு முறையாகிலும் கூடவேண்டு

மென்ற கருத்துத் தெரிவிக்கப்பட்டது. கவுன்சில் கூடும்போதுமட்டுமல்ல, அதற்குப் பிற்பாடும், முன்பும் அந்த வட்டாரத்திலுள்ள விஷயங்களையெல்லாம் நல்ல முறையில் பரிசீலனை செய்து பார்த்து, கவுன்சில் கூட்டங்களில் நல்ல ஆலோசனைகளைச் சொல்லி, நல்ல முறையில் பணியாற்றவேண்டும். ஒரு கவுன்சிலுக்குமேல் அங்கம் வகிப்பார்களேயானால் அவர்கள் சரிவர வேலை செய்ய முடியாது. இதுபற்றி யெல்லாம் விவாதித்துத்தான் ஒரு அங்கத்தினர் ஒரு கவுன்சிலில்தான் அங்கம் வகிக்கவேண்டுமென்ற முடிவுக்கு வந்திருக்கிறோம்.

10-50 a.m. இதனாலெல்லாம், அவர்கள் இரண்டு மூன்று இடங்களில், இரண்டு மூன்று கவுன்ஸில்களில் அங்கம் வகிக்கவேண்டும் என்று இருப்பது கூடாது. ஆகவே தான் இவற்றையெல்லாம் நன்றாகப் பரிசீலனை செய்து அதன் பிறகே அவர்கள் அங்கம் வகிப்பது ஓர் இடத்தில் இருந்தால் போதும் என்றும் முடிவு செய்யப்பட்டது. அதை இப்பொழுது மாற்றவேண்டிய அவசியமில்லை யென்றே நினைக்கிறேன். மேலும் அப்படி ஒரு கவுன்ஸிலில் அங்கத்தினராக இருந்தால்தான் அவர்கள் தீவிரமாக வேலைசெய்யமுடியும். இதிலும் ஒரு மாற்றம் செய்திருக்கிறோம். முன்னால் இம்மாதிரி மெம்பர்கள் ஒரு கவுன்சிலில் அங்கத்தினராக இருந்தால் மற்றொரு கவுன்சிலுக்கு மாற முடியாது என்று விதி இருந்தது. இப்போது அதை மாற்றி, அப்படிப்பட்ட மெம்பர்கள் ஒரு சபையில் அங்கத்தினராக இருந்தாலும், பின்னால் மற்றோரு சபைக்கு வேண்டுமானால் மாற்றிக்கொள்ளலாம் என்று மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறது. இதை அங்கத்தினர்கள் வரவேற்பார்கள் என்று நினைக்கிறேன்.

இதனால் ஸ்ரீ கோவிந்தசாமி அவர்கள் திருத்தம் தேவையில்லை. அவர்கள் அதை மேலும் வற்புறுத்தாமல், வாபஸ் வாங்கிக்கொள்ளுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன். இத்துடன் சர்க்கார் ஏற்றுக்கொண்ட திருத்தங்களுடன் இந்த கிளாஸை அங்கீகரிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : The question is :

(1) " In sub-clause (1) (*c*), *omit* the word ' all ' occurring in line 38 and the words ' whether the person so chosen is himself a president of a panchayat or not ' occurring in lines 39 and 40."

(2) " In sub-clause 3 (*b*), *omit* the last sentence, viz., ' A decision once made and intimated to the District Collector shall be final and shall not be liable to be modified. ' "

The amendments were put and carried.

MR. SPEAKER : The Government have accepted the three amendments moved by Sri N. S. Ramalingam. The question is :

(1) In sub-clause (1) after the existing item (*d*) *add* the following new item as item (*e*) and *renumber* the existing item (*e*) as (*f*) :—

" Presidents of Co-operative Central Banks in the District ".

In sub-clause (4) *after* the word " Council " *insert* the words " President of a Co-operative Central Bank ",

In sub-clause (4) *after* the words " member or Chairman " *add* the words " or President ".

The amendments were put and carried.

9th September 1958]

SRI T. S. RAMASWAMY PILLAI : I am withdrawing my amendment to sub-clause (1).

The amendment was, by leave, withdrawn.

SRI T. S. SAMPATH : I withdraw both the amendments that I have moved.

The amendments were, by leave, withdrawn.

SRI S. NAGARAJA MONIGAR : I withdraw both the amendments to sub-clause (1) that I have moved.

The amendments were, by leave, withdrawn.

SRI V. SANKARAN : I withdraw both my amendments.

The amendments were, by leave, withdrawn.

SRI T. S. RAMASWAMY PILLAI : I press my amendment to sub-clause (2) :

MR. SPEAKER : The question is :

" *For* sub-clause (2) *substitute* the following, viz., ' (2) The Chairman of the District Development Council shall be elected by the non-official members of the District Development Council ' ".

The amendment was put and declared lost.

Sri T. S. Ramaswamy Pillai demanded a poll.

(The Division bell was rung.)

MR. SPEAKER : The question is :

" *For* sub-clause (2) *substitute* the following, viz., ' (2) The Chairman of the District Development Council shall be elected by the non-official members of the District Development Council ' ".

The amendment was put and lost.

SRI M. KALYANASUNDARAM : I withdraw my amendment, Sir.

The amendment was, by leave, withdrawn.

SRI S. NAGARAJA MONIGAR : I withdraw my amendment to sub-clause (3).

The amendment was, by leave, withdrawn.

SRI A. GOVINDASAMY : Sir, I am pressing both my amendments.

MR. SPEAKER : The question is :

" *Delete* the words ' No Member of Parliament and ', in item (*a*) of sub-clause (3), and the words ' A Member of Parliament of ' in item (*b*) of the same sub-clause."

The amendment was put and lost.

MR. SPEAKER : The question is :

" *Add* the following as item (*c*) of sub-clause (3). '(*c*) A Member of Parliament shall be a member of all the District Development Councils of the Districts comprising his Constituency ' ".

The amendment was put and lost.

SRI S. M. ANNAMALAI : I am pressing my amendment.

MR. SPEAKER : The question is :

" In sub-clause 2 (*e*) *for* the words " The District Collector . . . Development Council ", *substitute* the words " Each District Development Council shall elect its own Chairman from among the members of the District Development Council ".

The amendment was put and lost.

SRI S. NAGARAJA MONIGAR : I withdraw my amendment to sub-clause (4).

The amendment was, by leave, withdrawn.

Clause 4 as amended was put and carried.

*Clause* 5.

MR. SPEAKER : The question is :

" That Clause 5 *do* form part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move :

(i) In sub-clause (1) *for* the word " other " occurring in line 33, *substitute* the word " all ".

(ii) *After* sub-clause (2) (*c*), *add* the following, namely :—

'(*d*) advising the Government on all matters relating to development of road transport '.

MR. SPEAKER : Now before we proceed further, I want to adopt the following procedure. I shall call the hon. Members one by one and they can move the amendments and get them seconded. I shall take all the amendments at the end and put them to the vote of the House.

SRI R. SRINIVASA IYER : Sir, I move :

(i) " In sub-clause (1) *for* the words ' as well as on other matters relating to the development of economic resources of the district ' *substitute* the words ' and in all matters relating to the development of the economic resources of the district or any part thereof ' ".

(ii) " In sub-clause (2) (*a*), *after* item (iv), *add* the following items, viz. :—

'(v) Highways and Roads,

(vi) Irrigation and Drainage ' ".

The amendments were duly seconded.

9th September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM, I shall explain it first, Sir. Instead of the first amendment moved by Sri Srinivasa Iyer, I suggest that it may be amended as " as well as on all matters relating to the development of the district ". I suggested that the word " other " occurring in line 5 of sub-clause (1) be substituted by the word " all ". I think the hon. Member, Sri Srinivasa Iyer will accept them.

SRI R. SRINIVASA IYER : They are not acceptable to me, Sir.

MR. SPEAKER : The hon. Member, Sri Srinivasa Iyer, does not accept the amendments suggested by the Hon. Minister.

SRI R. SRINIVASA IYER : I shall explain it at the end, Sir.

SRI V. SANKARAN : Sir, I move.

" In sub-clause (1) *omit* the word ' and ' occurring between the words ' culture ' and ' welfare ' and *add* the word ' and advancement ' after the word ' welfare ' and before ' of the inhabitants ' ".

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move :

" *After* sub-clause (1) *insert* the following as new sub-clause (2) and renumber the existing sub-clause (2) as sub-clause (3) :—

' (2) The Government shall not ordinarily deviate from the advice of the District Development Council, and in all such cases where it is considered necessary to deviate from such advice, a statement showing the reasons for such deviation shall be placed before the Houses of the Legislature ' ".

MR. SPEAKER : The amendment falls through for want of a seconder.

SRI A. GOVINDASAMY : Sir, I move :

" *After* sub-clause (1) *insert* the following as new sub-clause (2) and *renumber* the existing sub-clause (2) as sub-clause (3) :—

' (2) The Government shall not ordinarily deviate from the advice of the District Development Council, and in all cases where the Government do not accept such advice, a statement showing the reasons for such non-acceptance shall be placed before the Legislative Assembly ' ".

" *Add* the following as item (v) under sub-clause (3) (*a*) as renumbered.

' (v) and such other Departments of Government as deal with major district roads and village roads and the administration of the Motor Vehicles Act ' ".

The amendments were duly seconded.

SRI T. SAMPATH : Sir, I move :

" In item *(a)* (iii) of sub-clause (2), *add* the word ' Irrigation ' after the word ' and '."

The amendment was duly seconded.

SRI S. NAGARAJA MONIGAR : Sir, I move :

" In sub-clause (2), in item *(a)*, *for* the entries (i) to (iv), *substitute* the following entries, namely :—

' (i) Food, Agriculture and Forests,

(ii) Industries, Labour and Co-operation,

(iii) Public Works and Electricity,

(iv) Health, Education and Local Administration, and

(v) Road Transport ' ".

The amendment was duly seconded.

SRI M. KALYANASUNDARAM : I am not moving my amendment to sub-clause 2 *(a)* since the Government have already accepted a similar amendment.

SRI S. M. ANNAMALAI : Sir, I move the amendment standing in my name, namely :

" In sub-clause (2) *(a)*, *after* item (iv), *add* the following items, viz :—

' (v) Electricity; and

(vi) Transport.' ".

The amendment was duly seconded.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move :

(i) " In sub-clause *(b)* add at the end, ' and to suggest ways and means of preventing wasteful expenditure ' ".

(ii) " After sub-clause (2) *add* the following sub-clause, namely :—

' (3) *(a)* All resolutions of the District Development Councils relating to the Government shall be communicated by the Collector within 15 days of passing the same.

*(b)* The Government shall communicate the action taken on such resolutions within 45 days of receipt of the same.' "

The amendments were duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move :

" *Add* the following as new sub-clause (3) to the clause :

' (3) The advice of the District Development Council shall be acted upon by the Government wherever possible, if the advice is not acted upon by the Government for any reasons, the same

shall be communicated to the District Development Council with reasons for not acting on the advice and this shall be done within a month after the advice is received by the Government '.".

The amendment was duly seconded.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion. Let Members make their speeches, and then I shall put the amendments to the vote of the House, after the Hon. Minister replies. 11 a.m.

Sri R. Srinivasa Iyer will now speak. He can speak on the clause and also on all the amendments and not necessarily on his amendment only.

* SRI R. SRINIVASA IYER : Sir, I have moved my amendment to substitute the words ' and in all matters relating to the development of the economic resources of the District or any part thereof ' with this view only. That is, the Council can deal with matters relating to subjects that affect the entire district as a whole. A technical argument that the District Development Council cannot deal with the development of a portion of the district should not be allowed to be raised in the Council either by the Chairman or by the members. Therefore, I have stated, only for the purpose of clarification that *after* the words ' resources of the District ' the words ' or any part thereof ' should be added. A technical objection that a subject relates only to the development of a portion of the district and not the entire district should not be the criterion for rejecting a suggestion for the development of a part of the district. I only want to make the position clear. Now, if a subject is taken up for developing a part of the district, an objection can be raised that it is a subject which does not relate to the entire district as a whole and therefore should not be taken up. I do not want such a situation should arise.

In sub-clause (2) (*a*), I have sought to add the following items, namely, ' Highways and Roads ' and ' Irrigation and Drainage '. The reason for this amendment is this. ' Public Works ' is mentioned as item (iii) in sub-clause 2 (*a*). ' Public Works ' is not understood to include ' Highways ', because there is a separate Highways Department with a Chief Engineer in charge. If at all there is to be development in villages, roads must come first for development. If we provide proper roads in villages, development in other respects will come of its own accord. Therefore, I want Highways and Roads should be mentioned specifically. Of course, the Government have moved an amendment for the inclusion of Road Transport. Road transport may have a technical meaning about buses or other transport. The development of Highways and Roads has got a specific meaning—a technical meaning. I request that my amendment to include ' Highways and Roads ' be accepted. I have also stated that ' Irrigation and Drainage ' should be included. ' Food and Agriculture ' is mentioned as

item (i) in sub-clause (2) (*a*). 'Irrigation and Drainage' is a peculiar problem in parts of my district. For example in Arantangi taluk, both irrigation and drainage are problems. This is a taluk where there is no irrigation at all and there is no proper drainage. Lands are inundated by floods. This portion of the district has got to be specifically attended to. Therefore, the development of irrigation and drainage in that part of the district is an important item. Of course, all matters relating to the development of the district will be dealt with. But when some items have been specifically mentioned, it is but proper that important matters like Highways and Roads and Irrigation and Drainage are also mentioned specifically in the clause. If nothing is mentioned in the clause, then we can bring in anything for consideration. Otherwise, it is but proper that Highways and Roads and Irrigation and Drainage are specifically included in the clause.

There are district roads and there are village roads. Many roads have been formed under the local development scheme. They have not been handed over to highways for maintenance. The development is going to take place in Pattukkottai and Arantangi taluks. The declaration of one particular highway as a provincial highway or a national highway or a district highway or even a district road or village road has got to be made by the District Development Council. The Council will not be making such a declaration if it does not consider the question of development of roads. 'Drainage' and 'Irrigation', as I said are important items. Several tanks have not been renovated. Supplies to these tanks have not been provided from jungle streams through supply cross channels. Though Food Development Council is being formed and Members (including a retired and experienced Chief Engineer) are being appointed to it, it may be that the Council does not take up matters relating to particular portions for development. Therefore it is but proper that the Council which is concerned with the development of the district as a whole considers the question of increasing food production, giving irrigation facilities, giving drainage facilities, etc. In fact portions of Pattukkottai taluk are inundated even to-day though there is no rain. That is why all the subjects have got to be mentioned in the clause. I appeal to the House to accept my amendment to add the words 'or any part thereof' after the words 'resources of the district' in sub-clause (1) and also add 'Highways and Roads' and 'Irrigation and Drainage' after item (iv) in sub-clause (2) (a).

**Sri V. SANKARAN :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஐந்தாவது க்ளாசுக்கு நான் கொடுத்திருக்கும் திருத்தம் ரொம்பவும் பார்மலானது தான். அதனால் அதை எற்றுக்கொள்ளவேண்டும். செக்ஷன் ஐந்தை எடுத்துக்கொண்டால் அதில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்றால் "for promoting the culture and welfare of the inhabitants of the district" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு நான் கொடுத்திருக்கும் திருத்தம் ரொம்பவும் சாதாரணமானது, ஒத்துக்கொள்ள வேண்டிய திருத்தம் தான். அதாவது; "*Omit* the word

9th September 1958] [Sri V. Sankaran]

' and ' occurring between the words ' culture and welfare ' and *add* the words ' and advancement, after the word ' welfare ' and before ' of the inhabitants ' என்பது. கல்சர், வேல்பேர் இவைகளுடன் அட்வான்சுமெண்டும் ரொம்பவும் அவசியம்தான். அந்த ஜில்லாவில் இருக்கக்கூடியவர்களுக்கு கல்சர், வெல்பேர் இவைகள் வேண்டும் என்று சொல்லும்போது அவர்களுக்கு அட்வான்சுமெண்டும் அவசியம் தான். அதற்காகத்தான் இந்த திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏற்கெனவே நாம் முதல் ஐந்தாண்டு திட்டத்தில் Welfare State ஆகவேண்டும் என்று மட்டும் சொல்லப்பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் Progressive and advanced State ஆகவும் ஆகவேண்டும் என்று சொல்லப்பட்டு இருக்கிறது. அதாவது Welfare-க்கு மேல் ஒருபடி advancement என்பது. அத்துடன் அட்வான்சுமெண்டு அவசியமாக இருப்பதால் இந்த திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். இதை ஏற்றுக்கொள்ளவேண்டும். நான் கொடுத்திருப்பது இப்பொழுது இருக்கும் வாசகத்தை ஒரு படி உயர்த்துவதாக இருக்கும். இதன் வாசகத்தை நன்றாக வாசித்துப் பார்த்தால் அது தெரியவரும். இதை ஏற்றுக்கொள்வதற்கு சர்க்கார் ஆட்சேபிக்க மாட்டார்கள் என்றே நினைக்கிறேன். இத்தனை சொன்ன பிறகும் இந்த திருத்தத்தை ஏற்றுக்கொள்ள தயாராக இல்லை என்றால் இதை நான் விட்டு விடுவதற்கும் தயாராக இருக்கிறேன்.

* Sri A. GOVINDASAMY : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த டெவலப்மெண்ட் கவுன்சில் செய்கிற சிபாரிசுகளை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள மறுத்தால் அதற்கு வேண்டிய காரணங்களை குறிப்பிட்டு அதை விவாதிக்கும்படியான நிலைக்கு ஒரு இடம் தரவேண்டும். அதன் படி இந்த புதிய கிளாசை சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். (சில குறுக்கீடுகள்.) சர்க்கார் தரப்பில் இது சம்பந்த மாக வேறு ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறார்கள் என்கின்ற காரணத் தால் நான் இந்த திருத்தத்தைப்பற்றி மேற்கொண்டு ஒன்றும் சொல்வ தற்கு இல்லை. அதற்கு அடுத்தாற்போல் இதே கவுன்சில் ஜில்லா ரோடு களைப்பற்றியும் கிராம ரோடுகளைப்பற்றியும் பஸ் போக்குவரத்து விஷயமாக வும் அதில் சேர்த்துக்கொள்ளவேண்டும். அதுதான் இந்த திருத்தத்தின் நோக்கம். அதை கனம் அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ளுவார் என்றே நினைக்கிறேன்.

* Sri T. SAMPATH : கனம் சபாநாயகர் அவர்களே, எனக்கு முன் பேசிய கனம் அங்கத்தினர் ஸ்ரீனிவாசய்யர் அவர்கள் நீர்ப்பாசனத் தின் முக்கியத்துவத்தைப்பற்றி பேசி குறிப்பாக நமது அரசாங்கம் சிறு நீர்ப்பாசனத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்திருப்பதாகவும் குறிப் பிட்டார். அதற்கு என்று பல திட்டங்களையும் அரசாங்கம் வகுத்துக்கொடுத் திருக்கிறது. அவைகளைப்பற்றி இப்படிப்பட்ட கூட்டங்களில் பேசுவதற்கு வாய்ப்புவேண்டும். மேலும் நேற்றைய தினம் கனம் உணவு மந்திரி அவர்கள் குறிப்பிடும்போது நமது மாகாணத்தில் உணவு நிலை மிகவும் திருப்திகரமாக இருப்பதாகவும் சொன்னார். இன்னும் எங்கள் ஜில்லாவாகிய தஞ்சை ஜில்லாவில் வடிகால், பாய்கால் போன்ற பல முக்கியமான விஷயங்கள் இருக்கின்றன. அவைகள் எல்லாம் சீர்கேடான நிலையில் இருக்கின்றன. அதற்கு வேண்டிய வழிவகை காண்பதற்கும் அது சம்பந்தமாக பல யோசனைகளைச் சொல்லுவதற்கும் இதுபோன்ற ஒரு சபையில் விஷயங்களை எடுத்துச் சொல்ல சந்தர்ப்பம் கொடுக்கவேண்டும். பல திட்டங்களை வகுத்து நல்ல யோசனைகளைச் சொல்வதற்கும் வாய்ப்பு வேண்டும். அந்த எண்ண 10-10 a.m.
தில்தான் " இர்ரிகேஷன் " என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. மூன்று வது பிரிவில் பப்ளிக் வொர்க்ஸ் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதைப் பற்றி எல்லோருக்கும் தெரியும். பப்ளிக் வொர்க்சும் இர்ரிகேஷனும் சேர்ந்து போகக்கூடியதுதான். இந்த இரண்டு விஷயங்களும் ஒன்றுதான் என்பது எல்லோருக்கும் தெரியும். ஆகவே இர்ரிகேஷன் சம்பந்தமாகவும் அந்தக்

கவுன்சில் விவாதிக்க ஒரு வாய்ப்பு இருக்கவேண்டும் என்ற நோக்கத்துடன்தான் "இர்ரிகேஷன்" என்ற ஒரு பொருளை சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று நான் ஒரு திருத்தத்தை கொடுத்திருக்கிறேன். அதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI S. NAGARAJA MONIGAR: Sir, among the subjects
11-10 a.m. included for discussion in the advisory council, I would like that 'Prohibition' is added. At present there is a special committee in the district to give advice. But there is no necessity for it hereafter inasmuch as this advisory council will be coming into existence.

Sri Srinivasa Iyer said that 'Irrigation' may be added to the list. If really such importance is to be given to this matter, and if this cannot be taken care of by this council, the existing periodical irrigation conference that meets once in six months may be retained. Inasmuch as the Hon. Minister agreed to add 'Road transport' in the list, I only request that 'Prohibition' also be added. I request Government to look into this.

* SRI S. M. ANNAMALAI: கனம் தலைவர் அவர்களே, மாவட்ட அபிவிருத்திக் கவுன்சில்களின் அலுவல்களில் பஸ் போக்குவரத்து, மின்சாரம் ஆகிய இலாகாக்களையும் சேர்க்கவேண்டுமென்று நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். பஸ் போக்குவரத்து சம்பந்தமாக மக்களுக்குப் பல குறைகள் இருந்துவருகின்றன. அவைகளையெல்லாம் போக்குவதற்கான ஆலோசனை செய்ய "பஸ் போக்குவரத்து" விஷயமும் இந்த மாவட்ட அபிவிருத்திக் கவுன்ஸிலின் அலுவலாக இருக்கவேண்டும். அத்துடன் மின்சார இலாகாவும் சேர்க்கப்படவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER: "ரோட் ட்ரான்ஸ்போர்ட்" விஷயமும் இந்த அபிவிருத்திக் கவுன்சிலின் அலுவலில் சேர்த்துக்கொள்ளப்படவேண்டும் என்று அரசாங்கமே இப்பொழுது ஒத்துக்கொண்டிருக்கிறார்கள்.

* SRI K. SATTANATHA KARAYALAR: கனம் சபாநாயகர் அவர்களே, டிஸ்ட்ரிக்ட் டெவலப்மென்ட் கவுன்சில்கள், டிஸ்ட்ரிக்ட் போர்டுக்குப் பதிலாக வருவது அல்ல. பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன், முனிசிபாலிடி முதலிய ஸ்தல ஸ்தாபனங்களோடு தொடர்பு ஏற்படுத்தக்கூடிய முறையில் அமைவதாக, அதாவது கோஆர்டினேடிங் ஏஜென்ஸி போன்று அமைவதாக இந்த மசோதா உருவாக்கப்பட்டிருக்கிறது. அது வெறும் பெயரளவுக்கு ஆலோசனைக் குழுவாக மாத்திரம் அமையாமல், இதற்கு முன்பு பேசிய நண்பர் ஸ்ரீ பி. ஜி. மாணிக்கம் அவர்கள் சொன்னதுபோல், இந்த சட்டசபையில் நடக்கக்கூடிய ஒரு அடிப்படையிலே அமையவேண்டும், ஓரளவு அங்கு சொல்லக்கூடிய யோசனை பொறுப்போடு சொல்லப்படுமானால், அந்த ஆலோசனை கவனிக்கப்படவேண்டும்.

சாதாரணமாக, ப்ளானிங் போர்டு, ப்ளாக் அட்வைசரி கமிட்டி போன்ற கூட்டங்களில் ஒவ்வொருவரும் அவரவர்களுடைய தொகுதிக்கு 10 லட்சம், 50 லட்சம் செலவில் பெரிய பெரிய திட்டங்கள் வேண்டுமென்று சொல்வார்கள். ஆனால், நடைமுறையில் இது சாத்தியமா என்பதைக்கூட அவர்கள் சிந்திப்பதில்லை. சாத்தியம் ஆகாது என்று தெரிந்தும்கூட, சில ஆலோசனைகள் சொல்லப்படுகின்றன. ஓரளவு பொறுப்போடு சொல்லக்கூடியவாறு நான் கொண்டுவந்திருக்கும் திருத்தம் உதவும். அப்படிப் பொறுப்போடு சொல்லக்கூடிய ஆலோசனையை சர்க்கார் எந்த முறையில் பரிசீலனை செய்தது, நிராகரித்திருந்தால், ஏன் நிராகரித்தது என்று சபைக்குத் திரும்பி தெரியப்படுத்தினால் அந்தச் சபை ஒன்றிரண்டு

நாட்கள் கூடி இதை சாங்கோபாங்கமாக மறுபடியும் விவாதிக்க வழி செய்யப்படுமானுல் பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன், முனிசிபாலிடி இவைகளின் பிரதிநிதிகளாக வந்திருப்பவர்கள் ஓரளவு பொறுப் புணர்ச்சியோடு பணியாற்ற சந்தர்ப்பம் கிடைக்கும். அந்த முறையிலே, டிஸ்ட்ரிக்ட் டெவலப்மெண்ட் கவுன்சில்கள் செய்யும் சிபார்சுகளை சர்க்கார் அவ்வப்போது ஏன் அமுல் நடத்தவில்லை என்பதைத் திரும்ப அந்தச் சபைக்குத் தெரியப்படுத்தி, அந்தச் சபை அடுத்த தடவை கூடும்போது, அதை அஜெண்டாவில் முதல் ஐடமாக வைத்து விவாதிப் பதற்குச் சந்தர்ப்பம் கொடுக்கவேண்டும். அந்த முறையில், ஒரு சிறு சட்டசபை போன்று அந்த டெவலப்மெண்ட் கவுன்ஸில்கள் உருவாகும்படி வளர்த்து வருவது முக்கியமான காரியமாகும். ஆகவே, என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளு கின்றேன்.

Mr. SPEAKER : Now the hon. Member Sri Palanisamy may move his amendment. I am allowing the hon. Member to move the amendment now as a special case. Hereafter, I will not allow him to do like this. In future, he should be quick in moving his amendment and getting it seconded. Now, let him move his amendment and let it be seconded.

Sri N. K. PALANISAMI : Mr. Speaker, I move—

" After sub-clause (1) *insert* the following as new sub-clause (2) and *renumber* the existing sub-clause (2) as sub-clause (3) :

' (2) The Government shall not ordinarily deviate from the advice of the District Development Council and in all such cases where it is considered necessary to deviate from such advice, a statment showing reasons for such deviation shall be placed before the Houses of the Legislature'. ".

Sri N. MARUDACHALAM : I second the amendment, Sir.

The Hon. Sri C. SUBRAMANIAM : I think a similar amendment has already been moved.

Mr. SPEAKER : Anyway, now that he has moved the amendment, let him speak on it.

Sri N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, என்னுடைய திருத்தம் மிக முக்கியமானது. கனம் மந்திரி அவர்கள் நேற்றையதினம் பேசியபோது, பஞ்சாயத்து யூனியனுக்கும் பஞ்சாயத் துக்கும் அதிக அதிகாரம் வேண்டுமேயொழிய, ஜில்லாவில் இருக்கும் கவுன்சிலுக்கு அவ்வளவு அதிகாரம் வேண்டியதில்லை என்ற முறையிலே பேசினுர்கள். பல பஞ்சாயத்துக்களிலே நடந்த ஊழல்கள் நமக்குத் தெரிந்தவையே. சில பஞ்சாயத்துக்கள் சைக்கிள் வரியைக் குறைத்து, மற்ற வரிகளை உயர்த்தினுர்கள். அதே போன்று பெரீய பெரிய வீடுகளுச்கு வரியைக் குறைத்தார்கள், சில வீடுகளுக்கு வரியை உயர்த்திருைகள். இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களிலே சர்க்கார் தலையிட்டு அம்மாதிரி வரிக்குறைப்பை ஆதரிக்கவில்லை. இதுபோன்ற விஷயங்கள் ஜில்லா அபிவிருத்திக் கவுன்ஸில் முன்பு வந்து, அவர்கள் முடிவு எடுத்து விட்டால், அதைச் சர்க்கார் நிறைவேற்றவேண்டும்.

[Sri N. K. Palanisami] [9th September 1958

எங்கள் ஜில்லாவிலே இருக்கும் கவுன்சிலிலே 1955-ம் வருஷத்திலே எலெக்ட்ரிஸிடி சார்ஜ்ஜை $6\frac{1}{4}$ சத விகிதமாக குறைக்கவேண்டுமென்று ஜில்லா கவுன்ஸில் தீர்மானம் போட்டு இருந்தார்கள். பைக்காரா எலெக்ட்ரிஸிடி ஸிஸ்டம் இன்ஜினீர் அவர்களும் சிபார்சு செய்தார்கள். ஆனால், சர்க்கார் இதுவரை என்ன நடவடிக்கை எடுத்தார்கள் என்று தெரியவில்லை. இம்மாதிரியான விஷயங்களில் ஜில்லா கவுன்சில்கள் என்ன முடிவு எடுக்கிறார்களோ, அந்த முடிவைச் சர்க்கார் ஏற்றுக்கொள்ளவேண்டும். அப்படி முடியாவிட்டால், ஏற்றுக்கொள்ளாததற்கான காரணம் என்ன என்பதைத் தெரிவித்தாகவேண்டுமென்று கோரும் என்னுடைய திருத்தத்தை ஆதரிக்கவேண்டுமென்று நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

**SRI J. MATHA GOWDER** : சபாநாயகர் அவர்களே, ஆலோசனைக் குழுவிலே ரோட் ட்ரான்ஸ்போர்ட் விஷயத்தைச் சேர்த்துக்கொள்ள அமைச்சர் அவர்கள் ஒத்துக்கொண்டார்கள். ஆனால், மின்சாரம் சம்பந்தமாக ஒத்துக்கொள்ளவில்லை. இது மிகவும் முக்கியமானது. மின்சாரம்பற்றி தனியாக போர்டு இருக்கிறதென்று சொல்லலாம். இருந்தாலும், இது விஷயமும் அந்தக் குழுவின் ஆலோசனைக்கு வரவேண்டுமென்று நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஏனென்றால், ஒரு கிராமத்திற்கு மின்சார விஸ்தரிப்பு செய்யப்படவேண்டுமென்று கேட்டுக்கொண்டால், கிராமத்தார்கள் எல்லோரும் கூட்டாக விண்ணப்பம் செய்து, சர்க்காருக்கு அனுப்பிய பிறகு, அக்ரிமெண்ட் எழுதிக்கொடுத்த பிறகு, மின்சாரம் கொடுக்கிறார்கள். அதுவும் எப்பொழுது கொடுக்கிறார்கள்? மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு அந்தக் கிராமத்திற்கு மின்சாரம் போட்டுக் கொடுக்கிறார்கள். மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு அவர்கள் மின்சாரம் போட்டாலும், ஏதாவது ஒரு தனி நபர், தம் வீட்டுக்கு மின்சாரம் எடுத்துக்கொள்ள முடியவில்லை, பண வசதி இல்லை என்று மறுத்துவிட்டால், அவர் அக்ரிமெண்ட் செய்துகொண்ட காலத்திலிருந்து மூன்று வருஷ காலத்திற்கு உண்டான கட்டணம் மின்சார இலாகாவினால் வசூலிக்கப்படுகிறது. இதனால் கிராம மக்களுக்கு அதிகக் கஷ்டம் ஏற்படுகிறது. ஆகவே, மின்சார இலாகாவையும் இதில் சேர்த்தால், இந்தக் குழுவிலே அதுபற்றியும் ஆலோசனை செய்து, சர்க்காருக்கு ஆலோசனைகளைத் தெரிவிக்கமுடியும். ஆகவே, மின்சாரம் சம்பந்தமான விஷயத்தையும் குழுவின் அலுவல்களில் ஒன்றாகச் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று நான் மிகத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**SRI K. R. VISWANATHAM** : தலைவர் அவர்களே, இந்த மாவட்ட வளர்ச்சி மன்றங்கள் செய்யவேண்டிய அலுவல்களிலே மிக முக்கியமானதுமான, திருவாளர் ஸ்ரீனிவாச அய்யர் திருத்தம் கொடுத்துள்ளதுமான நீர்ப்பாசனத் தலைப்பையும் சேர்க்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். ஒவ்வொரு ஜில்லாவிலும் சில பகுதிகள் நீர்ப்பாசன வசதி முழுவதும் அற்ற நிலையில் இருக்கின்றன. அவற்றுக்கு நீர்ப்பாசன வசதி தேடிக் கொடுக்கக்கூடிய முறைகளையும் வழிகளையும் கண்டுபிடித்து, இம்மாதிரி ஆலோசனைகளை தனிப்பட்ட முறையில் கொடுப்பதற்கு நீர்ப்பாசனத் தலைப்பையும் இந்தக் குழுவின் அலுவல்களில் ஒன்றாகச் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன்

**THE HON SRI C. SUBRAMANIAM** : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஆர். ஸ்ரீனிவாச அய்யர் கொடுத்திருக்கும் திருத்தத்தை முதலாவது எடுத்துக்கொள்வோம். "District or any part thereof" என்று அதிலே சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று திருத்தத்தைக் கொடுத்திருக்கிறார்கள். "டிஸ்ட்ரிக்ட்" என்று சொல்லும்போது, அது ஜில்லாவின் எந்த ஒரு பகுதியை மட்டும் குறித்துவிட்டு மற்ற பகுதியைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. ஜில்லா பூராவுக்கும் இருக்கக்கூடிய விஷயத்தைக் குறிக்கும். எந்த விஷயத்தை எடுத்துக்கொண்டாலும், அது ஒரு பகுதிக்குத்தான்

9th September 1958] [Sri C. Subramaniam]

உரியதாக இருக்குமேயொழிய, ஒவ்வொரு இடத்திற்கும் பொருந்தக் கூடியதாக எந்த ஒருவிதமான திட்டமும் இருக்கமுடியாது. ஆகவே, அந்தத் திருத்தம் அவசியம் இல்லை என்று நான் கருதுகிறேன். " District or any part thereof " என்று சேர்க்கவேண்டிய அவசியம் இல்லை. " டிஸ்ட்ரிக்ட் " என்று போட்டுவிட்டால் எல்லாவிதமான திட்டங்களையும் நாம் ஆலோசனை செய்யலாம்.

அடுத்தபடியாக, கனம் அங்கத்தினர் ஸ்ரீ சங்கரன் கொடுத்திருக்கும் திருத்தத்தை எடுத்துக்கொள்வோம். " **advancement** " என்ற வார்த்தையைச் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று திருத்தம் கொடுக்கப் பட்டிருக்கிறது. அது அவசியம் இல்லை. " **Culture** " என்பது மனப் பண்பாட்டை வளர்ப்பதற்கு உதவும். " **Welfare** " என்பது பொருளா தார உயர்வைக் கொடுக்கக்கூடியதாக அமையும். இந்த இரண்டு பதங்களிலேயே எல்லாவிதமான முன்னேற்றங்களும் உட்பட்டிருக் கின்றன. ஆகவே, தனியாக " **Advancement** " என்ற பதத்தைச் சேர்க்கவேண்டியதில்லை. அப்படிப் போட்டால், எதிலே " அட்வான்ஸ் மென்ட் " என்று கேட்க வேண்டியதாக இருக்கும். **Culture and Welfare** என்பதிலேயே எல்லாவிதமான காரியங்களும் அடங்கிவிடும் என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

மூன்றாவதாக, கனம் அங்கத்தினர்கள் ஸ்ரீ என். கே. பழனிசாமி ஸ்ரீ கோவிந்தசாமி முதலியவர்களின் திருத்தத்தைக் கவனிப்போம். குழு சொல்லக்கூடிய ஆலோசனைகளை சர்க்கார் ஏற்றுக்கொள்ளவேண்டும் ; ஏற்றுக்கொள்ளாவிட்டால், ஏற்றுக்கொள்ளாததற்கான காரணங்களை விளக்கவேண்டுமென்று இம் மசோதாவில் திருத்தம் செய்யவேண்டு மென்று சொல்கிறார்கள். இதேவிதமான திருத்தமாக இல்லாவிட்டாலுங் கூட, 11-வது ஷரத்திலேயே எல்லோரும் ஆலோசனை செய்து அங்கு ஒரு திருத்தம் செய்வதாக ஒப்புக்கொண்டிருக்கிறோம். அதாவது வருஷத்திற்கு ஒரு முறை ஆண்டு அறிக்கை வரும்போது சர்க்காரானது கவுன்ஸிலினுடைய ஆலோசனைகள் ஒவ்வொன்றின் பேரிலும் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது என்பதைக் குறிப்பிட்டால் அதை இந்த அசெம்பளி முன்னால் வைத்து சர்ச்சை செய்யலாம் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். ஆகையால் அதைச் சட்ட விதியாக்க வேண்டிய அவசியம் இல்லையென்று சொல்ல விரும்புகிறேன். அது அட்மினிஸ் ட்ரேடிவ் ப்ரொஜீஸீரல் மாட்டர்கள். ரூல்ஸ்களில் அதைப்பற்றிக் குறிப் பிட்டு விடலாம்.

அடுத்தபடியாக இர்ரிகேஷன், எலெக்ட்ரிஸிடி முதலியவற்றை இவற்றுடன் சேர்த்துகொள்ளவேண்டுமென்ற கருத்து சொல்லப் படுகிறது. இதில் கவனிக்கவேண்டிய விஷயம் என்னவென்றால் இந்த ஷரத்தின் வாசகத்தை ஸ்ரீ சீனுவாசய்யர் முதற்கொண்டு கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

" . . . by all local authorities in the districts as well as those agencies in the district, which are under the administrative control of the Government in the following departments, . . ."

It will be seen from the wording of that clause that the subjects included in the respective departments would be covered . . .

ஆகையால் உணவு விவசாயம் என்றால் அந்த இலாகா இப்போது என்ன என்ன காரியங்களைக் கவனித்து வருகிறதோ அவ்வளவும் சேர்ந்துவிடும். சிங்கோனா அதில் வந்துவிடும். அதேமாதிரி இண்டஸ்ட்ரி, லேபர் அண்டு கோவாப்ரேஷன் என்றால் அந்த இலாகாவில் என்ன என்ன காரியங்கள்

நடைபெற்று வருகின்றனவோ அவ்வளவு காரியங்களும் இதற்குள் அடங்கி விடும். அப்படியே "பப்ளிக் வொர்க்ஸ்" என்ருல் இந்த இலாகாவினுல் செய்யப்படுகிற காரியங்கள் இர்ரிகேஷன், ரோடு ஆகிய எல்லாக் காரியங் களும் வந்துவிடுகிறது. ஆனுல் இந்த இலாகாவிற்குள் அடங்காத ரோடு டிரான்ஸ்போர்ட் சம்பந்தமாக இதில் சேர்க்கவேண்டுமென்று சர்க்காரே திருத்தம் கொடுத்திருக்கிறது. மற்றவைகளைப் பற்றி சேர்க்க வேண்டிய அவசியம் இல்லை. சேர்க்காமலேயே அந்த விஷயங்கள் எல்லாம் வந்து விடுகிறது. ப்ரொகிபிஷனைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். ஷரத்து எட்டில் "ஹெல்த் அண்டு வெல்பாருக்குக்" கீழ் "ப்ரொகிபிஷன்" என்பதையும் சேர்த்துவிடலாம் என்று எண்ணிக்கொண்டிருக்கிருேம். அப்போது அது பற்றி கவனம் செலுத்தத் தனி கமிட்டியே அமைந்துவிடும். அதையும் இங்கே சேர்க்கவேண்டாம் என்று சொல்லிக் கொள்கிறேன்.

பாக்கி எல்லாம் நான் முன்பே சொல்லியிருக்கிறேன். எந்த அள வுக்கு அந்த ஆலோசனைகளை ஏற்றுக்கொள்வது, ஏற்றுக்கொள்ள முடி யாதவைகளுக்குக் காரணம் என்ன என்பது இலாகா நிர்வாக அறிக்கை யில் வரும். அதை இந்தச் சபையில் வைத்து நாமும் விவாதிக்கலாம். ஆகையால் அந்த அந்த விதி வரும்போது அதற்குத் தக்கபடி திருத்தம் செய்துகொள்ள முடியும். இப்போது ஸ்ரீ சட்டநாத கரையாளர், ஸ்ரீ கோவிந்தசாமி, ஸ்ரீ பழனிசாமி முதலிய எல்லோரும் தங்கள் தங்கள் திருத் தங்களை வற்புறுத்தாமல் இருக்கும்படியாக நான் கேட்டுக்கொள்கிறேன்.

SRI R. SRINIVASA IYER : What about Highways?

THE HON. SRI C. SUBRAMANIAM : It is one of the subjects dealt with by the Public Works Department.

MR. SPEAKER : I shall put the Government amendments to vote : The question is :

"In sub-clause (1) *for* the word 'other' occurring in line 33, *substitute* the word 'all'."

The amendment was put and carried.

MR. SPEAKER :—The question is :

"After sub-clause 2 (*c*), *add* the following, namely—

"(*d*) advising the Government on all matters relating to development of road transport."

The amendment was put and carried.

SRI R. SRINIVASA IYER : In view of what the Hon. the Leader of the House has stated and in view of the Government amendment which has been accepted, I am withdrawing my amendments.

The amendments were, by leave, withdrawn.

All the other amendments also were, by leave, withdrawn.

Clause 5, as amended, was put and carried.

*Clause* 6.

MR. SPEAKER : There is a Government amendment.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"In sub-clause (1) *for* the words 'shall meet at such times and places' *substitute* the words 'may meet as ofen as may be necessary."

9th September 1958]

**Sri A. GOVINDASAMY** : சர்க்காருடைய திருத்தம் தெளிவு இல்லாமல் இருக்கிறது. (கனம் ஸ்ரீ வி. சுப்பிரமணியம் :—நன்ருகப் படித்துப் பார்த்தால் தெளிவாகவே இருக்கும்.) எப்பொழுது வேண்டுமோ அவ்வப்போது கூட்டிக் கொள்ளலாம் என்று இருக்கிறதேயொழிய மாதம் ஒரு முறையோ, தேவைப்பட்டால் இரண்டு முறையோ கூடித்தான் தீர வேண்டுமென்ற அளவுக்கான விதி இருந்தால்தான் நல்ல பலன் அளிக்கும். அதற்குத் தக்க வகையில் இந்தத் திருத்தம் அமையவேண்டும் என்பதற்காக நான் என்னுடைய திருத்தத்தைப் பிரேரித்து வற்புறுத்து கிறேன்.

Mr. SPEAKER : First of all, let him move the amendment.

Sri A. GOVINDASAMY : Sir, I move—

" *Substitute* the following for the existing sub-clause (1) :—

' The District Development Council shall meet once a month and as often as may be necessary in the same month at such times and places and shall, subject to the provisions of sub-sections (2) and (3), observe such rules of procedure in regard to transaction of business at its meetings (including the quorum at meetings) as may be prescribed by the Government under this Act)"

Sri P. U. SHANMUGAM : I second the amendment.

Sri S. M. ANNAMALAI : Sir, I move—

" In sub-clause (1) *for* the word ' three ' *substitute* the word ' two '."

Sri M. SELVARAJ : I second the amendment.

Sri A. GOVINDASAMY : Sir, I move—

" In sub-clause (2) *for* the words ' any member nominated by him in that behalf ' *substitute* the words ' any member elected by the majority of the members present '. "

Sri M. SELVARAJ : I second the amendment.

Sri T. SAMPATH : Sir, I move—

" In sub-clause (2) *for* the word ' nominated ' *substitute* the word ' proposed ' and *for* the words ' by him in that behalf ' *substitute* the words ' by the members present at the meeting ' ".

Sri V. SANKARAN : I second the amendment.

**Sri T. SAMPATH** : கனம் சபாநாயகர் அவர்களே, என்னுடைய திருத்தத்தின் நோக்கம் இதுதான். அபிவிருத்தி கவுன்சில் கூட்டத்திற்கு கலெக்டர் தலைமை தாங்குவார்கள். அவர் கூட்டத்திற்கு வராவிட்டால் அவரால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவர் அந்தக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கவேண்டுமென்று இருக்கிறது. இந்த அதிகாரத்தைக் கலெக்டருக்குக் கொடுக்கக்கூடாது. கலெக்டர் வராவிட்டால் கூட்டத்திற்கு வந்துள்ள மெஜாரிடி அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிற ஒருவர் தலைமை தாங்கவேண்டுமென்று நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். இதை அநேகமாக அமைச்சர் அவர்கள் ஒப்புக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன். ஒப்புக் கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன்.

* SRI A. GOVINDASAMY : கலெக்டர் வராத நேரத்தில் கலெக்டரால் நாமினேட் பண்ணக்கூடியவர் தலைமை வகித்துக் கூட்டத்தை நடத்த வேண்டும் என்பது சரியல்ல. அந்தக் கூட்டத்திற்கு வந்திருக்கிறவர்கள் மெஜாரிட்டியாக முடிவு செய்கிறவர் தலைமை வகித்து நடத்த வேண்டும் என்பதுதான் ஜனநாயக உரிமைக்குச் சரியானது. இந்த அடிப்படையான ஜனநாயக உரிமையைக்கூட பறிக்க நினைத்தால் அதை விட்டுக் கொடுக்க முடியாது. ஆகவே ஸ்ரீ டி. சம்பத் அவர்களுடைய திருத்தத்தைச் சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

11-30 a-m. THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே இந்தச் சபை அடிக்கடி கூடவேண்டுமென்ற ஒரு கருத்து அடிப்படையில் சில திருத்தங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதில் நாம் கவனிக்கவேண்டியது என்னவென்றால் சட்டபூர்வமாக எந்தக் காலவரை அளவுக்குள் கூட வேண்டுமென்று வரையறை செய்வது ஒன்றாகும். உதாரணமாக இந்தச் சபையை எடுத்துக்கொண்டால் அவசியம் நேரும்போதெல்லாம் கூடலாம். ஆனால் குறிப்பாக ஒரு கூட்டத்திற்கும் இன்னொரு கூட்டத்திற்கும் இடையில் 6 மாதங்களுக்கு மேல் இருக்கக் கூடாது என்கிற காலவரை இருக்கிறது. உதாரணமாக, நமது சட்ட சபையின் எந்த இரு கூட்டங்களுக்கும் இடையில் உள்ள காலம் ஆறு மாதங்களுக்கு மேற்படக்கூடாது என்று விதி வகுக்கப்பட்டிருக்கிறது. ஆறு மாதத்திற்கு ஒரு முறைதான் சட்ட சபை கூடவேண்டும் என்று அந்த விதிக்கு அர்த்தம் இல்லை. அலுவல் இருந்தால் ஆறு மாதங்களுக்கும் முன்னதாகவே கூடலாம் ; அவசியம் இருந்தால் ஒரு மாதத்திற்கு ஒரு முறையோ இரண்டு மாதங்களுக்கு ஒரு முறையோ கூடலாம். ஆனால், அதற்காக இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை சட்டசபை கூடவேண்டுமென்று சட்டமியற்றிவிட்டால், அலுவல் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை சட்ட சபை கூடியாக வேண்டிய கட்டாயம் ஏற்படும். அதே மாதிரிதான், ஜில்லா அபிவிருத்திக் கவுன்சிலின் எந்த இரு கூட்டங்களுக்கும் இடையிலுள்ள காலம் மூன்று மாதங்களுக்கு மேற்படக்கூடாது என்று சட்டமியற்றினால், அது மூன்று மாதங்களுக்கு ஒரு முறைதான் கூடவேண்டும் என்று அர்த்தமில்லை. ஜில்லா அபிவிருத்தி கவுன்சில் இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை கூடவேண்டும் என்று சட்டத்தில் விதி வகுத்துவிட்டால், அலுவல் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அது இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை கூடவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும். எனவே அவசியத்தை அனுசரித்து அது அடிக்கடி கூடலாம் என்று விதி வகுக்கலாம். அதற்கேற்றபடி திருத்தப்படும் 6-வது பிரிவின் (1)-வது உப பிரிவின் வாசகம் பின் வருமாறு இருக்கும்.

'The Development Council may meet as often as may be necessary and shall, subject to the provisions of sub-sections (2) and (3) observe such rules of procedure . . . . . . . . . ; provided that not more than three months shall elapse between one meeting of the District Development Council and another.'

(Sri P. U. Shanmugham in the Chair.)

இக்காலத்திலுள்ள நிலைமை கருத்திற்கொள்ளப்பட்டு, 3 மாதங்கள் தான் சரியான கால வரையறையாக இருக்கும் என்று கருதப்பட்ட பிறகு தான் இந்தக் கால வரையறை நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கால வரையறையை இரண்டு மாதங்களாக நிர்ணயிக்க வேண்டுமென்று சிலர் திருத்தங்கள் கொடுத்திருக்கிறார்கள். இரண்டு மாதங்களுக்கும் மூன்று மாதங்களுக்கும் அதிக வித்தியாசம் இல்லை. ஆகவே "மூன்று மாதங்களே" இருக்கலாம். அவசியம் இருந்தால் கவுன்சிலை 3 மாதங்களுக்கும் முன்பே கூட்டுவதற்கு வகை செய்வதற்காகத்தான் **'as often as may be necessary'** என்று போட்டிருக்கிறோம்.

மேலும் அபிவிருத்திக் கவுன்சிலில் "ஸ்டாண்டிங் கமிட்டிகள்" அமைக்கப்படுவதற்கு மசோதாவில் வகைசெய்திருக்கிறோம். அந்தக் கமிட்டிகள் எப்போது வேண்டுமானாலும் கூடி எந்தப் பிரச்னைகுறித்தும் ஆலோசிக்க

9th September 1958 [Sri C. Subramaniam]

லாம். எந்த விஷயத்தையும் அந்தக் கமிட்டிகள் முதலில் பரிசீலித்த பிறகு, அது கவுன்சிலுக்குக் கொண்டுவரப்பட்டால்தான் கவுன்சில் அதை நன்ருகப் பரிசீலிக்க முடியும். இல்லாவிட்டால், கவுன்சில் புள்ளிவிவரங் களும் ஆதாரங்களும் இல்லாமல் கஷ்டப்படும். ஆகவே இந்தப் பிரிவு இந்த மாதிரியே இருந்தால், எந்த விஷயமும் ஸ்டாண்டிங் கமிட்டியின் பரிசீலனைக்குப் பிறகு கவுன்சிலுக்கு வருவதற்கு இப்பிரிவு வகை செய் யும். இந்தக் காரணங்களால், மூன்று மாதங்கள்தான் சரியான கால வரையறை என்று சொல்லிக்கொள்கிறேன்.

6-வது பிரிவில் (2)-வது உப பிரிவானது, கலெக்டர் இல்லாதபோது யார் தலைமை வகிக்கலாம் என்று குறிப்பிடுகிறது. கலெக்டர் மக்க ளால் தேர்ந்தெடுக்கப்பட்டவராக இல்லாவிட்டாலும் அவரை ஜில்லா அபிவிருத்திக் கவுன்சிலின் தலைவராக வைத்துக்கொள்ளலாம் என்று தீர்மானிக்கப்பட்டு விட்ட பிறகு, அவர் இல்லாதபோது அவரால் நேமகம் செய்யப்படுபவரைத் தலைவராக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதை ஆட்சேபிக்க வேண்டியது அவசியம் இல்லை. மசோதா தயாரிக்கப்பட்ட போது இதுபற்றி ஆலோசிக்கப்பட்டது. கலெக்டர் இல்லாதபோது தலைமை வகிக்க வேண்டியவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற முறை இருந் தால், சில இடங்களில் கட்சிப் பிரதி கட்சிகள் ஏற்படும் என்றும், கட்சிப் பிரதி கட்சிகளின் போட்டியின் காரணமாக கவுன்சில் அங்கத்தினர் களிடையே மனக் கசப்பு ஏற்பட்டு கவுன்சில் நல்ல முறையில் இயங்காது என்றும் கருதப்பட்டதால் தான், தாம் இல்லாதபோது தலைமை வகிக்க வேண்டியவரை கலெக்டர் நேமகம் செய்யலாம் என்று விதி வகுக்கப் பட்டிருக்கிறது. சில இடங்களில் கட்சிப் பிரதிகட்சிகள் ஒத்துழைக்கும் என்பதில் சந்தேகமில்லை. சில இடங்களில் கட்சிப் பிரதிகட்சிகள் ஒத்துழைக்காது. ஆகவே கலெக்டருக்கு பர்த்தியான தலைவர் அவரால் நேமகம் செய்யப்படுவதுதான் நல்ல முறை. கலெக்டர் மக்களால் தேர்ந் தெடுக்கப்பட்டவராக இல்லாவிட்டாலும், அவரை கவுன்சிலின் தலைவராக வைத்துக்கொள்ளலாம் என்று தீர்மானிக்கப்பட்டுவிட்ட பிறகு, கலெக் டருக்கு பர்த்தியான தலைவர் அவரால் நேமகம் செய்யப்படுவதைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. இந்தக் காரணங்களால், இந்தத் திருத்தங் களுக்கு அவசியமில்லை. எனவே இந்தத் திருத்தங்களை வற்புறுத்த வேண்டாமென்று அவைகளைப் பிரேரேபித்த கனம் அங்கத்தினர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

(Mr. Speaker in the Chair.)

MR. SPEAKER : I am now going to put the Government amendment to the vote of the House. The question is—

'In sub-clause (1) of clause 6, *for* the words 'shall meet at such times and places', *substitute* the words "may meet as often as may be necessary".'

The amendment was put and carried.

The amendment of Sri A. Govindasamy to sub-clause (1) and the amendment of Sri S. M. Annamalai were by leave withdrawn.

MR. SPEAKER : Is the hon. Member Sri Govindaswamy withdrawing his amendment to sub-clause (2) also?

SRI A. GOVINDASAMY : I am pressing it, Sir.

MR. SPEAKER : The question is—

'In sub-clause (2) *for* the words "any member nominated by him in that behalf", *substitute* the words "any member elected by the majority of the members present".'

The amendment was put and lost.

The amendment of Sri T. Sampath was by leave withdrawn.

Clause 6 as amended was put and carried.

Clause 7 was put and carried.

*Clause* 8.

MR. SPEAKER: Motion moved—

'That clause 8 *do* stand part of the Bill.'

SRI A. GOVINDASAMY: Mr. Speaker, Sir, I move the amendment standing in my name, namely—

'*Delete* the words "may, and if so required by the Government", occurring in lines 11 and 12 of sub-clause (1) (*a*).'

The amendment was duly seconded.

SRI S. NAGARAJA MONIGAR: Mr. Speaker, Sir, I move—

'In sub-clause (1) *for* the word "shall", *substitute* the word "may".'

The amendment was duly seconded.

Amendment 59 of the hon. Member Sri T. Sampath fell through for want of a seconder.

SRI R. SRINIVASA IYER: Mr. Speaker, Sir, I move the amendment standing in my name, namely:—

In sub-clause (1) (*a*) after item (v) *add* the following items, viz.:—

"(vi) Highways and Roads; and

(vii) Irrigation and Drainage."

The amendment was duly seconded.

SRI A. GOVINDASAMY: Mr. Speaker, Sir, I move the amendment standing in my name, namely:—

In sub-clause (1) (*a*) *add* the following as items (vi) and (vii):—

"(vi) Co-operation;

(vii) Major district roads and village roads."

The amendment was duly seconded.

MR. SPEAKER: In respect of amendment No. 45 given notice of by the hon. Member Sri A. Govindasamy, I don't find any such words in sub-clause (*b*). I think there should be some mistake.

THE HON. SRI C. SUBRAMANIAM: It is sub-clause (6) and not sub-clause (*b*).

9th September 1958]

MR. SPEAKER : The hon. Member must have written '6' and that must have been read as 'b' by the office.

The hon. Member can move that amendment.

SRI A. GOVINDASAMY : Mr. Speaker, Sir, I move—

'In sub-clause (6) *delete* the words " who are Members of the District Development Council " in lines 14 and 15.'

The amendment was duly seconded.

SRI A. GOVINDASAMY : Mr. Speaker, Sir, I move—

'In sub-clause (*b*) *omit* the words " with the previous sanction of the Government " occurring in lines 19 and 20.

The amendment was duly seconded.

SRI R. SRINIVASA IYER : Mr. Speaker, Sir, I move the amendment standing in my name, namely :—

*For* sub-clause (2) first paragraph, *substitute* the following, viz. :—

'The Government may nominate such number of gazetted officers from out of the members of the District Development Councils, as they deem fit to be members of the each standing committee referred to in sub-section (1).'

The amendment was duly seconded.

SRI S. NAGARAJA MONIGAR : Mr. Speaker, Sir, I move the amendment standing in my name, namely :—

'In sub-clause (3) at the end of the first proviso *add* the words " unless otherwise ordered by Government ".'

The amendment was duly seconded.

SRI A. GOVINDASAMY : Sir, I move the amendment standing in my name, namely :—

'In sub-clause (3) *delete* the second proviso.'

The amendment was duly seconded.

SRI V. SANKARAN : Mr. Speaker, Sir, I move—

'In sub-clause (3) *omit* the second proviso.'

The amendment was duly seconded.

SRI A. GOVINDASAMY : Mr. Speaker, Sir, I move the following amendments standing in my name, namely :—

(1) '*Delete*' sub-clause (4) and (5).'

(2) 'In sub-clause (7) *for* the words "nominated, chosen or appointed," in lines 16 and 17, *substitute* the words "nominated or chosen" and *for* the words "nominated, chosen or appointed" in line 20, *substitute* the words, "nominated or appointed".'

The amendments were duly seconded.

SRI R. SRINIVASA IYER: Mr. Speaker, Sir, I move the amendment standing in my name, namely :—

'In sub-clause (7):

(*a*) *for* the words "before such period" *substitute* the words "before the expiry of the year"; and

(*b*) *omit* the word "aforesaid".'

The amendment was duly seconded.

MR. SPEAKER: The clause as well as the amendments are before the House for discussion.

THE HON. SRI C. SUBRAMANIAM: Before taking up the discussion, I wish to indicate to the hon. Members that I am accepting amendment to sub-clause (1) (*b*) moved by the hon. Member Sri Govindasamy and amendment to sub-clause (7) moved by Sri Srinivasa Iyer.

**SRI A. GOVINDASAMY:** கனம் தலைவர் அவர்களே, என்னுடைய **42-வது** திருத்தத்தை கனம் அமைச்சர் ஏற்றுக்கொண்டதற்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். 8-வது பிரிவில், உப பிரிவு (1) **(a)**-ல், கூட்டுறவு, மேஜர் ஜில்லா ரோடுகளும் கிராம ரோடுகளும் என்பவை சேர்க்கப்பட வில்லை. அவைகளுக்காகவும் ஸ்டாண்டிங் கமிட்டிகள் அமைக்கப்பட வேண்டு மென்பதற்காக அவைகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

கலெக்டர்கள் இஷ்டப்பட்டால் ஒருசிலரை இந்தக் கமிட்டிகளில் அங் கத்தினர்களாக நியமிப்பதற்கு மசோதா வகைசெய்கிறது. இப்படி அங் கத்தினர்கள் நியமிக்கப்பட்டால், அவர்களுக்கு வோட்டுரிமை இல்லாவிட் டாலும் கமிட்டியின் அங்கத்தினர்களின் எண்ணிக்கை அதிகமாவதுடன், அவர்கள் தாங்கள் சொல்லுவதுதான் சரி என்று கமிட்டியினிடம் வலி யுறுத்தக்கூடிய நிலைமையும் ஏற்படும். ஆகையால், அதுசம்பந்தப்பட்ட "க்ளாஸ்"-களை நீக்கிவிட வேண்டும் என்னும் என் திருத்தத்தை வலி யுறுத்துகிறேன்.

**SRI S. NAGARAJA MONIGAR:** "ஸ்டாண்டிங் கமிட்டிகள்" ஏற்படுத்துகிற விஷயத்தில் "டெவலெப்மெண்ட் கௌன்ஸில் மே" என்றிருக்கிறது. தவறுகிற சந்தர்ப்பத்தில் சர்க்கார் கட்டாயம் செய்யலாம் என்றும் இருக் கிறது. இத்தகைய ஒரு நிலைக்கு விடாமல் கௌன்ஸிலே வேண்டிய ஸ்டாண்டிங் கமிட்டிகளை நிறுவிக் கொள்ளலாமென்று எனது திருத்தத் தில் குறிப்பிட்டிருக்கிறேன். அதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள் வார்கள் என்று நினைக்கிறேன். அடுத்தப்படியாக, ஒவ்வொரு கமிட்டி யிலும் அங்கம் வகிக்கும் அங்கத்தினர்கள் ஒரு கமிட்டிக்கு மேற்பட்டு இருக்கக்கூடாதென்று ஒரு விதியிருக்கிறது. அதிலே, "அரசாங்கம் தேவை யானால்" என்ற ஒரு உப விதியைக் கூட சேர்க்குமாறு கேட்டுக்கொள்கி றேன்.

9th September 1958]

SRI R. SRINIVASA IYER : Sir, sub-clause (2) of clause 8 reads thus—

'Each standing committee referred to in sub-section (1) shall consist of such number of Gazetted Officers of the Government as are nominated by the Government from out of the members of the District Development Council.'

The amendment proposed by me reads as follows :—

'The Government may nominate such number of Gazetted Officers from out of the members of the District Development Councils, as they deem fit to be members of each Standing Committee referred to in sub-section (1).'

It is a question of mere language and if the sub-clause stands as it is, it will mean that the standing committee shall consist only of the nominated Gazetted Officers. I know there are sub-clauses (3) and (4) where provision is made to nominate other members also. Why not sub-clause (2) cover other sub-clauses also. The proper wording is what is suggested in my amendment :— 11-40 a.m.

I am not altering the scope of the Bill or the total meaning of all the sub-clauses taken together. It is only for clarification that I have moved the amendment, and I appeal to the Hon. Minister to accept it.

So far as sub-clause (7) is concerned, my amendment is acceptable to the Government.

Since clause 5 has already been amended, I am not pressing my amendment to sub-clause (1) (*a*) .

SRI V. SANKARAN : சப் கிளாஸ் 3-ல் உள்ள ப்ராவைஸோவை எடுத்து விட வேண்டுமென்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதற்குக் காரணம், ஸ்டாண்டிங் கமிட்டிக்கு தேர்ந்தெடுக்கப் படுகிறவர்கள் தங்களுக்குள்ளேயே தங்கள் இடத்தை இஷ்டப்பட்டால் பரிமாறிக்கொள்ளலாம் என்று **Proviso** சொல்கிறது. அதை எடுத்து விட்டால் நன்றாக இருக்கும். முதலில் எந்த முறையில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்பது ரூலில் பின்னால் "ப்ரிஸ்க்ரைப்" செய்யப்படும் என்று இருக்கிறது. வெள்ளை அறிக்கையில் லாட் போட்டு ஸ்டாண்டிங் கமிட்டிக்கு அங்கத்தினர்கள் எடுக்க வேண்டுமென்று சொல்லப்பட்டு இருக்கிறது. அந்த முறையும் அவ்வளவு சரியல்ல என்றுதான் நான் நினைக்கிறேன். அவர்களுக்குள்ளேயே, ஸ்பெஷல் நாலெட்ஜ், ஆப்டிட்யூட் உள்ளவர்களை, நல்ல தேர்ச்சி யுடையவர்களை ஆரம்பத்திலேயே இருந்து ஸ்டாண்டிங் கமிட்டிக்கு எடுப்பதுதான் நல்லது. ஆகவே பின்னால் ஒரு கமிட்டியில் இருந்து இன்னொரு கமிட்டிக்கு மாற்றிக்கொள்ளலாம் என்ற சலுகை அளிக்க வேண்டியதில்லை ஆகவே இந்த ப்ரொவைஸோவை எடுத்துவிட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, before I reply to the debate, I would like to move the following amendment :—

'In sub-clause (1) (*a*), item (v) *add* the words "including Prohibition".'

MR. SPEAKER : Amendment moved—

'In sub-clause (1) (*a*), item (v) *add* the words "including Prohibition".'

**The Hon. Sri C. SUBRAMANIAM :** முதல் திருத்தம், கோவிந்தசுவாமி அவர்கள் கொடுத்திருப்பது, '**may and if so required by the Government**' என்ற வார்த்தைகளை எடுத்துவிட வேண்டுமென்பதாகும், ஸ்டாண்டிங் கமிட்டியை நியமிப்பது டெவலப்மெண்ட் கௌவுன்ஸிலுக்கு விடப் பட்டிருக்கிறது. இந்த மசோதாவில், இதில் கொடுக்கப்பட்டுள்ள விஷயங்களைக் கவனிக்க ஸ்டாண்டிங் கமிட்டிகள் போடலாம் என்று இருக்கிறது. இந்த விஷயங்களை கவனிப்பதற்கு ஸ்டாண்டிங் கமிட்டிகள் போடாமல் இருந்தால் அவைகளை கவனிக்க ஸ்டாண்டிங் கமிட்டிகள் போட வேண்டுமென்று சர்க்கார் வலியுறுத்தலாம். டெவலப்மெண்ட் கௌன்ஸிலைப் பொறுத்த வரையில் இவ்விஷயங்களைப் பற்றி கவனிக்க ஸ்டாண்டிங் கமிட்டிகள் வேண்டுமானால் போடலாம் என்ற அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அவசியம் என்று சர்க்கார் கருதினால் அதற்காக அவர்கள் உத்தரவுபோட்டால் கட்டாயம் அந்த ஸ்டாண்டிங் கமிட்டிகள் போட்டு விஷயங்களை கவனிக்க வேண்டுமென்று அதில் இருக்கிறது. அப்படி இருப்பது, அதில் சர்க்கார் அடிக்கடி குறுக்கிடுவதற்காக அல்ல. முக்கியமான விஷயங்கள் ஏதாவது வந்தால் எல்லா டெவலெப்மெண்ட் கௌன்ஸிலின் ஆலோசனை தெரிய வேண்டுமென்ற அவசியம் இருந்தால் அதற்காக ஒரு ஸ்டாண்டிங் கமிட்டி போட்டு ஆலோசனை செய்து கௌன்ஸிலின் அபிப்பிராயத்தை அறிவதற்கு என்று இருக்கிறதே தவிர அவர்களது வேலைகளில் அடிக்கடி குறுக்கிடுவதற்கில்லை. அதிகாரம் முழுவதையும் டிஸ்டிரிக்ட் டெவலப்மெண்ட் கௌன்ஸிலிற்கு கொடுத்துவிட்டு வேண்டுமென்று இருந்தால் சர்க்கார் உத்தரவு இடும்போது கமிட்டிகளை நியமித்தாக வேண்டுமென்ற வாசகந்தான் அதில் இருக்கிறது. ஆகவே இந்தத் திருத்தத்திற்கு அவசியமில்லை, அடுத்தப்படியாக, **Industries, Labour and Co-operation, Public Works and Irrigation** என்று இருக்கிறது. முக்கிய விஷயங்கள் எவை பற்றி கவனிக்கவேண்டும் என்பது மட்டுந்தான் இதில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அடுத்தப்படியாக, பி–ல்,

'A District Development Council may, with the **previous** sanction of the Government constitute additional standing committees for such purposes as the District Development Council thinks fit.'

என்று இருக்கிறது. அதனால் அதற்கு போதுமான இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்ற விஷயங்களைப் பற்றியும் இம்மாதிரி ஸ்டாண்டிங் கமிட்டிகள் ஏற்பாடு செய்வதற்கு ஹைவேஸ், ரோட்ஸ், இரிகேஷன், ட்ரெய்னேஜ் என்பவைகளுக்கும் அதே வாதத்தைத்தான் நான் சொல்கிறேன். அதேபோல் **Electricity, Transport, Co-operation, Major District, Roads,** etc., கோவிந்தசுவாமி அவர்களின் 42–வது திருத்தத்தை நான் ஒப்புக்கொள்கிறேன். '**Will the previous sanction of the Government ?**" என்று போட்டிருப்பது அவசியமில்லை. ஸ்ரீனிவாஸ ஐயர் அவர்கள் சப் கிளாஸ் 2–ல் வாசகப் பிழை இருப்பதாகச் சொன்னார்கள். ஒரு விதியைப் படிப்பது என்றால் ஒரு சப் கிளாஸைப் மாத்திரம் படித்து விட்டு அர்த்தம் செய்யக்கூடாது. 2–வது சப் கிளாஸில்,

'Each standing committee referred to in sub-section (1) shall consist of such number of Gazetted Officers . . .'

In sub-clause (3) it is also stated—

'The other members of the District Development Council shall be chosen to the standing committee in such manner as may be prescribed.'

Therefore, the hon. Member cannot read sub-clause (2) only and leave the other sub-clauses. The whole clause should be read together and all the sub-clauses should be taken together. Therefore,

9th September 1958] [Sri C. Subramaniam]

that amendment is not necessary as necessary provisions are made in sub-clause (3) to nominate not only Gazetted Officers but also other Members.

என்றிருக்கிறது. அதற்கு அடுத்தபடியாக இரண்டு மெம்பர்களுக்கு மேற்படாமல் இந்த ஸ்டான்டிங் கமிட்டிக்கு நாமினேஷன் செய்யலாமென்று விதியிருக்கிறது. இது அவசியமே. ஏனெனில் பல முக்கியமான விஷயங்களைப் பற்றி கவனிக்கும்போது அதில் நிபுணத்துவம் வாய்ந்தவர்கள் வந்து உதவி செய்வது என்பதற்காக, வோட்டு உரிமை இல்லாமல் அவர்கள் வந்து விஷயங்களை எடுத்துச் சொல்லவே இவ்விதி சேர்க்கப்பட்டிருக்கிறதே தவிர வேறொன்றுமில்லை. ஆகவே அது அவசியந்தான். அப்படி அவர்களை ஆலோசனை சொல்வதற்கு நாம் எடுத்துக் கொள்ளும்போது அவர் தலைவராக இருக்கலாமா இல்லையா என்பது பற்றி முடிவு சொல்வதற்கு டெவலப்மென்ட் கௌன்ஸிலில் மெம்பர்களாக இருக்கிறவர் இதற்கு தலைவராக இருக்கலாம் என்ற வாசகந்தான் இதில் இருககிறது. 'Who are members of the District Development Council' என்று 6-வது உபவிதியில் கண்டிருக்கிறது. ஆகவே கோவிந்தசுவாமி அவர்கள் அதை எடுத்து விட வேண்டுமென்று சொல்வது தவறாகும் என்று நான் நினைக்கிறேன். அடுத்தபடியாக ஸ்ரீனிவாஸ ஐயர் கொடுத்திருக்கும் 6-வது திருத்தத்தை நான் ஒப்புக் கொண்டிருக்கிறேன். இப்பொழுதுள்ளதை விட தெளிவான வாசகம் அதனால் ஏற்படுகிறது. இதறகு மேல் எனக்கு வேறு ஒன்றும் சொல்வதற்கில்லை.

MR. SPEAKER: There is a Government amendment. The question is— 11.50 a.m.

"After sub-clause (1) (*a*) (v), add the words 'including Prohibition' after the words 'Health and Welfare'."

The amendment was put and carried.

MR. SPEAKER: The Government have accepted the amendment of Sri A. Govindasamy to sub-clause (1) (*b*) and the amendment of Sri R. Srinivasa Iyer to sub-clause (7). The question is—

"In sub-clause (*b*), *omit* the words 'with the previous sanction of the Government', occurring in lines 19 and 20."

The amendment was put and carried.

MR. SPEAKER: The question is—

"In sub-clause (7)—

(*a*) *for* the words 'before such period', *substitute* the words 'before the expiry of the year'; and

(*b*) *omit* the word 'aforesaid'."

The amendments were put and carried.

SRI A. GOVINDASAMY: I press my first amendment to sub-clause (1) (*a*).

MR. SPEAKER: The question is—

"*Delete* the words 'may' and if so required by the Government', occurring in lines 11 and 12 of sub-clause (1) (*a*)."

The amendment was put and lost.

All the other amendments were, by leave, withdrawn.

Clause 8 as amended was put and carried.

Clause 9 was put and carried.

*Clause* 10.

MR. SPEAKER : The motion is—

"That clause 10 do form part of the Bill."

SRI V. SANKARAN : Sir, I move my amendment, namely :—

"*Add* the following as new sub-clause (*e*)—

'(*e*) obtain from the Government, such information as may be required by it for carrying out the purposes indicated in sub-section (*a*), (*b*) or (*c*)'."

The amendment was duly seconded.

MR. SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

The hon. Member Sri Sankaran may speak as there is only one amendment to this clause.

SRI V. SANKARAN : இதில் நான் கொடுத்திருக்கின்ற திருத்தத்தின் நோக்கம் என்னவென்றால், இந்த பிரிவின் கீழ் டெவலப்மெண்ட் கவுன் ஸிலுக்கு சில அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. பஞ்சாயத் யூனி யன்களிடமிருந்தும், முனிசிபல் கவுன்ஸில்களிடமிருந்தும் புள்ளிவி வரங்களை பெற்றுக்கொள்வதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதே மாதிரி கவெர்ண்மெண்டிடமிருந்து விவரங்களை வாங்குவதற்கும் அதிகாரம் இருக்கவேண்டும். இதற்காக இந்த பிரிவில் கூடுதலாக " ஈ " என்ற சப்-கிளாஸ் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்கு பிரத்யேகமாக ஒரு சட்டவிதி இருக்கவேண்டியது அவசியமில்லை. இந்த டெவலப் மெண்ட் கவுன்ஸில் நல்ல முறையில் நடக்கவேண்டும் என்பது தான் சர்க்காருடைய விருப்பமும். அதற்காக வேண்டிய வழிகளை செய்து கொள் ளலாம். இதற்காக தனியாக ஒரு சட்டவிதி அவசியமில்லை என்று சொல் லிக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Is the hon. Member, Sri Sankaran pressing his amendment?

SRI V. SANKARAN : No, Sir.

The amendment was, by leave, withdrawn.

Clause 10 was put and carried.

*Clause* 11.

MR. SPEAKER : The motion is :

"That Clause 11 *do* form part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : I move :

"*Renumber* clause 11 as sub-clause (1) of that clause and after the clause so re-numbered, add the following :

9th September 1958] [Sri C. Subramaniam]

' (2) The Government shall lay on the table of both Houses of the Legislature all such reports together with their comments thereon.''

The amendment was put and carried.

Clause 11 as amended was put and carried.

Clauses 12 and 13 were put and carried.

*Clause* 14.

MR. SPEAKER : The motion is :

" That clause 14 *do* form part of the Bill."

SRI A. R. SUBBIAH MUDALIAR : Sir, I move the amendment standing in my name, namely :

" In sub-clause (3) *for* the words ' fourteen days ' *substitute* the words 'one month' ".

The amendment was duly seconded.

MR. SPEAKER : The clause and the amendment are before the House for discussion. Sri Subbiah Mudaliar may speak now.

* SRI A. R. SUBBIAH MUDALIAR : இதில் 14 நாட்களுக்குள் சமர்ப்பிக்கவேண்டும் என்றிருக்கிறது. அதை ஒரு மாதம் என்று திருத்த வேண்டும் என்பது தான் என்னுடைய திருத்தம். இவ்விதம் செய்தால் கூடுதல் சௌகரியமாக இருக்கும். இதனால் சர்க்காருக்கு ஒரு கஷ்டமும் ஏற்படாது என்று நம்புகிறேன். ஆகவே இதை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதன் மூலம் சர்க்காருக்கு ஒரு கெடுதியும் இல்லை. எல்லா விஷயங்களிலும் 14 நாட்கள் என்று தான் குறிக்கப்பட்டிருக்கிறது. 14 நாட்கள் என்றிருப்பதினாலும் ஒரு மாதம் என்றிருப்பதினாலும் பெரிய வித்தியாசம் ஒன்றும் ஏற்படப் போவதில்லை. இவ்விதம் 14 நாட்கள் என்று வைத்திருப்பதில் ஒரு கஷ்டமும் ஏற்பட்டிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஆகவே இந்த திருத்தம் அவசியமில்லை என்று நினைக்கிறேன்.

MR. SPEAKER : Is the hon. Member Sri Subbiah Mudaliar pressing his amendment?

SRI A. R. SUBBIAH MUDALIAR : I am not pressing, Sir.

The amendment was, by leave, withdrawn.

Clause 14 was put and carried.

*Clause* 1 *and the Preamble.*

MR. SPEAKER : The motion is :

" That clause 1 form part of the Bill."

The hon. Member, Sri T. S. Ramaswamy Pillai is not present and therefore his amendment is deemed to have been withdrawn.

THE HON. SRI C. SUBRAMANIAM : I accept the amendment of Sri T. S. Ramaswamy Pillai, Sir. Apart from this, I suggest another amendment also, namely, the words ' or dates ' occurring in line 1 of sub-clause (3) may be deleted. I have combined both the amendments in the following amendment. I move :

" *Delete* the words ' or dates ' occurring in line 1 and the words ' and different dates may be appointed for different parts of the State ' occurring in lines 2 and 3 of sub-clause (3)."

The amendment was put and carried.

Clause 1 as amended was put and carried.

The Preamble was put and carried.

MR. SPEAKER : The Hon. Minister may now move that the Bill be passed.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Sir, I move that the Madras District Development Councils. . .

SRI R. SRINIVASA IYER : Sir, under Rule 113 (2) of the Assembly Rules, I suggest that the third reading of the Bill may be taken up to-morrow. Many amendments were moved and a number of amendments were not accepted. Even where the Government have accepted the amendments moved by hon. Members, some of them require to be reconsidered, especially with regard to clause 4. What I am suggesting is that the Government may think overnight over it and see whether any reconsideration need not be made. I am not moving a dilatory motion.

MR. SPEAKER : The hon. Member will have to make a motion. Is he making a motion?

SRI R. SRINIVASA IYER : Yes, Sir.

MR. SPEAKER : What is it?

SRI R. SRINIVASA IYER : That is, under rule 113 (2), the third reading of the Bill may be taken up to-morrow.

MR. SPEAKER : I shall read rule 113 (2). It says :

" If, during the consideration of a Bill in the Assembly, any amendment is made, any member may, at the conclusion of the consideration of the Bill, object to a motion being made at the same sitting for its being passed."

Is the hon. Member acting on this?

SRI R. SRINIVASA IYER : Yes, Sir.

9th September 1958]

MR. SPEAKER : Then, according to the same rule,

"Thereupon, the Speaker shall, unless he considers that the request is frivolous or unreasonable, not allow a motion that the Bill be passed into law to be moved at the same sitting, but the Bill shall be brought up for further consideration at a subsequent sitting."

I am satisfied that the request is not frivolous and not unreasonable. But I am also satisfied that enough time had been taken by the House for considering the Bill. We can therefore take up the third reading of the Bill to-day itself. The Hon. Minister may now move, the motion.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Sir, I move that the Madras District Development Councils Bill, 1958 be passed.

MR. SPEAKER : Motion moved :

"That the Madras District Development Councils Bill, 1958 be passed."

SRI M. KALYANASUNDARAM : ஸார், இந்த மசோதா பல திருத்
தங்களோடு நிறைவேற்றப்பட விருக்கிறது. கொடுக்கப்பட்ட பல திருத் 12 noon.
தங்கள் நிராகரிக்கப்பட்டிருக்கின்றன. அந்தத் திருத்தங்களுக்குப் பின்னால்
இருக்கும் கருத்துக்களை சட்டத்தை நடைமுறைக்குக் கொண்டு வரும்
சமயத்தில் சர்க்கார் கவனத்தில் வைத்துக் கொண்டு அந்தத் திருத்
தங்கள் தேவை என்று கருதினால் அவ்வப்போது உத்திரவு பிறப்பிக்க
வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

இந்த மசோதாவினால் பெரும் மாறுதல் ஏற்பட்டு விட்டது என்று நான் மகிழ்ச்சியடையா விட்டாலும், இப்போது பிளானிங் போர்டு என்று ஒரு கூட்டம், வேண்டா வெறுப்புடன் கூட்டப்பட்டு அவசர அவசரமாக நடத்தப்பட்டு மெம்பர்கள் ஒன்று தெரிவிப்பது, அதிகாரிகள் ஒன்று தெரிவிப்பது என்று இல்லாமல், அந்த நிலை மாற ஒரு சந்தர்ப்பம் அளித்திருக்கிறது இந்த மசோதா என்ற அளவுக்கு நான் இதை வரவேற்கத் தயாராக இருக்கிறேன்.

அதே சமயத்தில் சர்க்கார் கவனத்திற்கு ஒன்று கொண்டு வர விரும்புகிறேன். முன்பு இருந்தது போலல்லாமல், சட்ட பூர்வமாக அமைக்கப்படும் குழுவானதால் அதிகாரிகள் மிகுந்த சிரத்தையுடன், மிகுந்த அக்கரையுடன் இந்தக் கூட்டங்களில் பங்கு கொள்ளவேண்டும். அங்கத்தினர்கள் கூறும் விஷயங்களை அக்கரையுடன் கேட்டுக் கொள்ளவேண்டும். கேட்கப்பட்ட விஷயத்தில் அக்கரை செலுத்தவேண்டும். அதன் பிறகு நிர்வாகத்தில் தகுந்த உத்திரவு பிறப்பிக்க வேண்டும். இப்போது நடத்தப்படும் கூட்டங்களில், சில கூட்டங்களுக்கு குறிப்பிட்ட அதிகாரிகள் வருவது கூட இல்லை. அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று ஒரு தீர்மானம் கொடுக்கும் சந்தர்ப்பம் ஏற்பட்டது என்று எடுத்துக் காட்ட விரும்புகிறேன். சட்டம் இயற்றி விட்டால் மட்டும் போதாது. அந்தச் சட்டத்தை நல்லெண்ணத்தோடு நடைமுறைச்குக் கொண்டுவரவேண்டும். நிர்வாகிகள் பொறுப்பு எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்ள விரும்புகிறேன்.

[Sri M. Kalyanasundaram] [9th September 1958

அதேசமயத்தில் சர்க்கார் அதிகாரிகளும், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளும் கூடுமான வரையில் ஒத்துழைக்கவேண்டியது அவசியம். ஒத்துழைப்பு இல்லாவிட்டால் நமது நிர்வாகத்தில் முன்னேற்றம் கொண்டுவர முடியாது. பொதுமக்கள் பிரதிநிதிகள், தாங்கள் தான் சிறந்தவர்கள் என்று கருதி அதிகாரிகள் மீது எப்போதும் சந்தேகம் கொள்வது என்பது கூடாது. அதே நேரத்தில் சர்க்கார் அதிகாரிகளும், மக்கள் பிரதிநிதிகளை கிளர்ச்சிக்காரர்கள், ஓட்டு வாங்கி வந்து விட்டார்கள், தங்களிடம் தான் அதிகாரம் இருக்கிறது என்று அவர்களிடம் அலட்சியமாக நடந்து கொள்ளக் கூடாது என்று அதிகாரிகளுக்குச் சொல்வதோடு, மக்கள் பிரதிநிதிகளுக்கும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்தச் சபையில் கொண்டு வரப்படும் விஷயங்களில் சர்க்கார் கட்சி, எதிர் கட்சி என்று இருந்தாலும், இந்தச் சபையின் கமிட்டிகளில் செய்யும் வேலைகளை கட்சி விருப்பு-வெறுப்பு பாராட்டாமல் பரிசோதித்து, பரிசீலித்து விவாதம் நடத்தி தீர்வு காணும் பண்பு இருக்கிறது. அதே மாதிரியான ஒரு பண்பை ஜில்லாக்களில் எதிர் பார்க்க முடியாது. ஆளும் கட்சியில் இருப்பவர்கள் ஜில்லாக் கமிட்டிகளில் கட்சி விருப்பு-வெறுப்புடன் நடந்துகொண்டால், சர்க்கார் அதிகாரிகள் ஸ்தம்பித்து விடுவார்கள். அதனால் குழப்பங்கள் ஏற்படும். சில பஞ்சாயத்து, முனிஸிபல் டெவலப்மெண்ட் குழுக்களில் அரசியல் கருத்து வித்தியாசம் காரணமாக குழப்பங்கள் ஏற்பட்டு அவைகள் சரியானபடி பணியாற்ற முடியாமல் இருக்கின்றன. நான் இதை எடுத்துக் காட்டாமல் இருக்க முடியாது. நாம் இங்கு எப்படி பிரச்னைகள் மீது விவாதம் நடத்துகிறோமோ, அதே பண்பை எல்லா அரசியல் கட்சிகளும் ஜில்லாக் குழுக்களில் பின்பற்றவேண்டும் என்று நான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

இன்னொரு யோசனையைத் தெரிவிக்க விரும்புகிறேன். அபிவிருத்திக் குழுவானது பயன்பெறத் தக்கதாக இருக்கும் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ராஜ்ய ரீதியில் இந்த ஸ்டாண்டிங் கமிட்டிகள் ஏற்படுத்தி, ஒவ்வொரு இலாகாவிற்கும் ஒரு ஸ்டாண்டிங் கமிட்டி ஏற்படுத்தி, அந்த ஸ்டாண்டிங் கமிட்டிகளும் பிரச்னைகளை, அபிவிருத்தித் திட்டங்களை, மற்றும் கொள்கை சம்பந்தப்பட்ட விஷயங்களை விவாதிக்க சந்தர்ப்பம் கொடுத்தால் இந்த சபையில் விவாதம் நல்ல முறையில் நடக்க இன்னும் உபயோககரமாக இருக்கும் என்று நம்புகிறேன். ஆகவே ராஜ்ய ரீதியிலும் ஒவ்வொரு இலாகாவிற்கும் ஸ்டாண்டிங் கமிட்டிகளை ஏற்படுத்தும் யோசனையை சர்க்கார் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு இந்த மசோதாவை ஆதரிக்கிறேன்.

* **SRI A. GOVINDASAMY** : இந்த மசோதா நிறைவேறுகிறபோது பல திருத்தங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டதற்காக நான் நன்றி தெரிவிக்கக் கடமை பட்டிருக்கிறேன். வேண்டுமென்றே, சில குறைபாடுகளை வைத்துக் கொள்வதற்காக, சில திருத்தங்களை நாங்களே ஏற்றுக் கொள்கிறோம் என்று ஏற்றுக்கொண்டார்களோ என்று நினைக்கிறேன் . . .

**THE HON. SRI C. SUBRAMANIAM** : எங்களுக்குத் தெரியாமலேயே சில தவறுகள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளைப் போக்குவதற்காக கனம் அங்கத்தினர்கள் திருத்தங்களைக் கொடுத்ததற்காக அவர்களுக்கு நன்றி தெரிவிக்க நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

* **SRI A. GOVINDASAMY** : திருத்தங்களை ஏற்றுக் கொண்டதற்காக அமைச்சர் அவர்களைப் பாராட்டுகிற நேரத்தில், அனுபவ சாத்தியமாக, நடைமுறையில் இந்த மசோதா அமுலுக்கு வரும்போது சில குறைபாடுகள் தோன்றுமானால், வேண்டிய திருத்தங்களை அரசாங்கத்தின் சார்பில் கொண்டு வர இணங்குவார்கள் என்ற நம்பிக்கையிலே இதை நான் வரவேற்கக் கடமை பட்டிருக்கிறேன்.

9th September 1958] [Sri A. Govindasamy]

இந்த சட்ட சபையிலே உள்ள எல்லா கட்சித் தலைவர்களும் கலெக்டர் தான் நிர்வாக அதிகாரியாக இருக்க வேண்டுமென்ற கருத்தை தனிப்பட்ட கூட்டத்தில் ஒத்துக் கொண்டிருக்கிறார்கள், ஆகவே இதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று சொன்னார்கள். சர்வ கட்சித் தலைவர்கள் ஏற்றுக் கொண்ட முடிவு என்றாலும் எல்லா உறுப்பினர்களும், சர்க்கார் கட்சியிலும் சரி மற்ற எதிர் கட்சிகளிலும் சரி வேறு தேர்ந்தெடுக்கப்பட்டவர் தான் தலைவராக இருக்க வேண்டுமென்று வலியுறுத்திச் சொன்னார்கள். இடையிலே சர்க்கார் கட்சித் தலைவர் அவர்கள் விளக்கம் தருகிறேன், ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று சொன்ன பிறகும் மூன்று அங்கத்தினர்கள், ஜில்லா போர்டு தலைவர்களாக இருந்த தேனீ தியாகராஜன் போன்றவர்கள் மறுத்துப் பேசவேண்டிய நிலைமை இருக்கிறது. ஆகவே, பரவலாக அதிகாரிகள் கையில் அதிகாரத்தைக் கொடுக்கக் கூடாது என்று மறுத்திருக்கிறார்கள். சர்க்கார் கட்சித் தலைவரும் எதிர் கட்சித் தலைவரும் தான் கலெக்டர் தலைவராக இருக்க வேண்டுமென்று வலியுறுத்திப் பேசியவர்கள். மற்றவர்களெல்லாம் அதிகாரிகள் கையில் உள்ள அதிகாரத்தை மக்கள் பிரதிநிதிகள் கைக்கு மாற்ற வேண்டுமென்று பேசியிருக்கிறார்கள். மற்றவர்களெல்லாம் இப்படிச் சொல்லும்போது இறுதியாக மசோதா கலெக்டர் தலைவர் என்ற பிரிவுடன் நிறைவேறுகிறது. அனுபவத்தில் எல்லா கலெக்டர்களும் மோசமாக நடப்பார்கள் என்று சொல்லமாட்டேன். ஒரு சில கலெக்டர்கள் தவறாக நடந்துகொண்டால், ஆண்டுக்கு ஒரு முறை அறிக்கை வரும்போது, ஒரு ஜில்லாவிலே தவறு ஏற்படுமானால், அதைப்பற்றி அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வந்தால், நன்கு கவனித்து நடவடிக்கை எடுக்க வேண்டுமென்பது என் விருப்பம்.

ஒரு கமிட்டியிலுள்ள அங்கத்தினரும், மற்றொரு கமிட்டியிலுள்ள அங்கத்தினரும் இஷ்டப்பட்டால் ஒரு கமிட்டியிலிருந்து வேறு கமிட்டிக்கு மாற்றிக் கொள்ளலாம் என்ற ஷரத்துடன் மசோதா நிறைவேறுகிறது. இதனால் மிக்க குழப்பங்கள் வரும் என்பது என்னுடைய அபிப்பிராயம். குழப்பம் வந்தால் பார்த்துக் கொள்ளலாமே, இதற்கு முன்கூட்டியே சந்தேகம் வருவானேன் என்று கேட்கலாம். என்னுடைய அனுபவத்தில் பார்த்ததிலிருந்து அம்மாதிரி குழப்பம் வரும் என்று தோன்றியதால் அந்தக் கருத்தை வலியுறுத்திச் சொன்னேன். இந்த சந்தர்ப்பத்திலே ஏற்றுக்கொள்ளாவிட்டாலும், ஜில்லா முன்னேற்ற சபைகள் ஏற்படும் சமயத்திலே, எல்லா ஜில்லாக்களிலும் முன்னேற்றம் காண வேண்டுமென்று அமைக்கப்படும்போது, பிற்பாடு யோசனை செய்து இதை மாற்றினால் நலமாக இருக்கும்.

நல்ல அபிவிருத்தி காண இந்தச் சட்டம் உதவியாக இருக்கும் என்ற காரணத்தால் நான் இந்த மசோதாவைக் கொண்டுவந்ததற்காக மகிழ்ச்சி தெரிவித்து முடித்துக் கொள்கிறேன்.

* **Sri V. K. RAMASWAMY MUDALIYAR:** கனம் சபாநாயகர் அவர்களே, இந்தச் சட்டம் இப்போது நிறைவேற்றப்படப் போகிறது. அநேக அங்கத்தினர்கள் தங்கள் கருத்துக்களை—நல்ல கருத்துக்களை—தெரிவித்தார்கள். அந்தக் கருத்துக்கள் அநேகமாக அமைச்சர் அவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டு இந்த மசோதா நிறைவேற்றப்படப்போகிறது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்தான் பிரெஸிடெண்டாக இருக்கவேண்டுமென்ற கருத்தைத் தெரிவித்தார்கள். முக்கியமாக சர்க்கார் கட்சித் தலைவரும், எதிர் கட்சித் தலைவரும்தான் கலெக்டர் தலைவராக இருக்கவேண்டுமென்று சொல்கிறார்கள். மற்றவர்களுக்கு அபிப்பிராய பேதம் இருக்கிறது என்று சொன்னார்கள். முக்கியமாக ஜனநாயக ரீதிப்படி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்தான் தலைவராக இருக்க வேண்டும் என்பதை புரிந்துகொள்ளாமல் இல்லை. இதைப்பற்றி அநேக கூட்டங்களில் யோசனை செய்து பார்த்தோம். ஜில்லா அதிகாரிகள் எல்லோரும் அபிவிருத்தி சபைக் கூட்டத்திற்கு வந்திருப்பார்கள். கலெக்டர் அவர்கள் தலைமை தாங்கினால், கூட்டத்தை நல்ல முறையில் நடத்தி எல்லா விவகாரங்களையும் தீர்ப்பதற்கு அருகதையாயிருக்க முடியும் என்று 12-10 p.m.

நினைத்தோம். இதிலே கட்சி மனப்பான்மையோடு, எலெக்ஷன் மூலம் ஒரு "non-official president"-ஐ தேர்ந்தெடுப்பது என்று வைத்தால் அதிலே எவ்வளவோ கோளாறுகள் வரும் என்பதைப் பற்றி யோசித்தோம். அவைகளைப் பற்றி யோசிக்காமல் இல்லை. எது எப்படியிருந்தாலும் கட்சி மனப்பான்மை யில்லாமல் இருப்பதுதான் நல்லது. முக்கியமாக, இது ஒரு அட்வைசரி கௌன்சிலாகத்தான் நிறுவப்பட்டிருக்கிறது. சர்க்காருக்கும் பஞ்சாயத்துகளுக்கும் இடையேயுள்ள ஒரு தொடர்புக் குழுவாக இது அமையப்போகிறது. ஆகவே கலெக்டர் தலைவராக இருந்தால் நன்றாக இருக்குமா, இருக்காதா என்பதைப் பற்றி, ஒரு கூட்டத்தில் அல்ல, மூன்று கூட்டங்களில் தீர்க்கமாகப் பரிசீலனை செய்து, ஒரு முடிவுக்கு வந்தோம். அதிகாரப்பற்றற்ற அங்கத்தினர்கள் இருக்கக்கூடாது என்ற மனப்பான்மையுடன் இதை நாங்கள் ஆலோசிக்கவில்லை. ஆகவே இதைப்பற்றி கனம் அங்கத்தினர்கள் தப்பு அபிப்பிராயம் கொள்ளக் கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன்.

இப்போது இந்த சபையிலும் அநேக திருத்தங்களை யோசித்து நிறைவேற்றியிருக்கிறோம். கனம் கல்யாணசுந்தரம் சொன்னது போல், எல்லாக் கட்சியினரும், இந்த அபிவிருத்தி சபையில் நிறைவேற்றப்படும் தீர்மானங்களை நல்ல முறையில் நிறைவேற்றுவதற்கு, ஒத்துழைக்க வேண்டுமென்பதுதான் எல்லோருடைய கருத்து. அங்கு நிறைவேற்றப்படும் தீர்மானங்களை அடுத்து அட்மினிஸ்டிரேஷன் ரிப்போர்ட் மூலமோ அல்லது வேறு விதமாகவோ சர்க்காருக்கு அவைகளை அனுப்பி, அக்குறைகளை உடனடியாகக் கவனித்து ஆவன செய்யவேண்டும். இந்த அபிவிருத்தி கௌன்சில் நல்லபடியாக நடக்கவேண்டும். அதன் மூலம் ஜில்லாவில் நடைபெறும் அபிவிருத்தித் திட்டங்கள் எல்லாம் நல்ல முறையில் நடக்க வேண்டும். அதற்காக எல்லோரும் ஒத்துழைப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை.

அங்கத்தினர்கள் கொண்டுவந்த அநேக திருத்தங்களை சர்க்கார் ஏற்றுக் கொண்டு, இந்த மசோதா இப்பொழுது சட்டமாவதைக் குறித்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

**MR. SPEAKER:** இப்பொழுதும் சில அங்கத்தினர்கள் பேசவேண்டுமென்று விரும்புகிறார்கள். இன்னும் ஒரு மணி நேரம்தான் இருக்கிறது. இரண்டு மசோதாக்கள் நிறைவேற்றப்படவேண்டும். நேற்றைய தினம் அநேக அங்கத்தினர்கள் பேசியாய்விட்டது. இப்பொழுது, மூன்றாவது ரீடிங்கில் கூட பல அங்கத்தினர்கள் பேசவேண்டுமென்று சொன்னால், நேரமில்லை. இப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணசாமி நாயுடு பேசுவார். அதற்குப் பிறகு கனம் மந்திரி அவர்கள் பேசுவார்கள்.

***SRI R. KRISHNASAMI NAIDU:** இந்த ஜில்லா அபிவிருத்திக் குழு சட்டத்தை நான் வரவேற்கிறேன். இச்சட்டத்தை நிறைவேற்றுங்கால், கட்சித் தலைவர், எதிர்க்கட்சித் தலைவர் ஆகிய இரண்டு பேர்களுடைய கருத்துக்கள்தான் பிரதிபலித்தன என்று கூறுவது பொருத்தமாக இருக்காது. அவர்கள் கூறிய சமாதானங்களுக்குப் பிறகு ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருந்ததினால்தான் அதை நாம் ஏற்றுக்கொண்டோம். நேற்று இரவு கனம் அங்கத்தினர்கள் எல்லோருக்கும் வழங்கப்பட்ட "சட்டசபை அங்கத்தினர்களின் குழு நடவடிக்கைப் பிரசுரங்களை" இரண்டு தினங்களுக்கு முன் வழங்கியிருந்தால், இந்த மசோதாவைப் பற்றிய சில தப்பு அபிப்பிராயங்கள், மனதிலே விளக்கம் இல்லாது சில கருத்துகள் அங்கத்தினர்களுக்குத் தோன்றியிருக்காது என்பது என்னுடைய அபிப்பிராயம். சட்டசபை அங்கத்தினர்கள் குழுவானது, இந்த மசோதாவிலுள்ள எல்லாப் பிரிவுகளையும் நன்கு பரிசீலித்திருக்கிறது என்பதை இந்தப் பிரசுரங்கள் எங்கள் கையில் கிடைத்த பிறகு தான் எங்களால் தெரிந்துகொள்ள முடிந்தது. நேற்று காலையில்கூட இந்த ஜில்லா

9th September 1958] [Sri R. Krishnasami Naidu]

அபிவிருத்திக் குழு மசோதாவை சட்டசபை அங்கத்தினர் குழு பரிசீலனை செய்திருக்கிறதா என்பதைப் பற்றி சிலருக்கு சந்தேகம் ஏற்பட்டது. குழுவின் நடவடிக்கைகள் விரிவான முறையில் நான்கு புத்தகங்களாக பிரசுரிக்கப்பட்டு வழங்கப்பட்ட பிறகு தான், அவர்கள் எவ்வாறு இந்த விஷயங்களை எல்லாம் அலசிப்பார்த்திருக்கிறார்கள், கலெக்டர் தலைவராக இருப்பதா, இல்லையா என்ற பிரச்னையில் குழுவிலுள்ள அங்கத்தினர்கள் எழுப்பிய வாதப் பிரதிவாதங்களுக்கு எல்லாம் நிதி அமைச்சர் அவர்களும், மற்றவர்களும் போதிய சமாதானங்களைக் கூறி, அதற்கான பரிகாரங்களைச் செய்து கொள்ளமுடியும் என்று சொன்னதன் பேரில், விரிவாக எல்லாப் பிரச்னைகளையும் ஆராய்ச்சி செய்து முடிவு செய்திருக்கிறார்கள் என்பது இந்த நடவடிக்கைகளிலிருந்து தெரியவருகிறது. ஆகவே, இந்தப் பிரசுரங்கள் இரண்டு தினங்களுக்கு முன் அங்கத்தினர்களுக்கு வழங்கப் பட்டிருக்குமேயானால், இந்த சட்டத்தை நிறைவேற்றும் வகையிலே இன்னும் சுமுகமான சூழ்நிலை ஏற்பட்டு, இந்த சட்டமானது எல்லோராலும் வரவேற்கப்பட்டிருக்கும் என்று கருதுகிறேன்.

என்றாலும் கூட இன்னும் பல விஷயங்களிலே எங்களுக்கு விளக்கம் தேவையாக இருந்தது. ஜில்லா போர்டால் நடத்தப்படும் ஹைஸ்கூல்கள் எதனுடைய வசத்திலே விடப்படும், அவைகளை யார் பராமரிப்பது, பெரிய ரோடுகளை யார் பராமரிப்பது, அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக் கின்றனவா என்ற சந்தேகங்கள் இருந்துகொண்டிருந்தன. இந்த பிரசுரங்களில் இந்த சந்தேகங்களுக்கு தீர்வு காணப்பட்டிருக்கும். ஏதோ ஒரு காரணத்தால்—ஒருவேளை அச்சடிப்பதில் ஏற்பட்ட தாமதம் காரண மாகவோ என்னமோ—இந்தப் பிரசுரங்கள் காலங்கழித்து விநியோகிக்கப் பட்டதைக் குறித்து நாம் மிகவும் வருத்தம் அடைகிறோம். முன்னமேயே விநியோகிக்கப்பட்டிருந்தால் இந்த மசோதா எல்லோராலும் நல்ல வகை யிலே வரவேற்கப்பட்டிருக்கும். சட்டசபை அங்கத்தினர்கள் குழுவும் அதில் சம்பந்தப்பட்ட மற்ற அதிகாரிகளும் எல்லாப் பிரச்னைகளையும் நன்கு பரிசீலனை செய்திருக்கிறார்கள் என்பதைப் பாராட்டுகிறேன்.

இந்தச் சட்டத்திலே பல விஷயங்களில் கூடமான சில கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன. சட்டம் என்றால் அப்படித்தானிருக்கும் என்று சிலர் சொல்லுவார்கள். நடைமுறையிலே, அதாவது இதை அமு லாக்கும் வகையிலே, சர்க்கார் சில விதிகளைச் செய்வார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், நாம் அனுபவத்திலே சில வருஷங் களாகப் பார்த்து வருகிறோம். மனதிலே ஒரு நோக்கத்தைக் கொண்டு நாம் இங்கே சட்டம் இயற்றுகிறோம். நிர்வாகத்தில் அனுபவம் உள்ள வர்கள் அதற்கு அநுசரணையாக விதிகளைச் செய்வார்கள். ஆனால் அந்த நோக்கம் நிறைவேற முடியாத வகையிலே சில சமயங்களிலே விதிகள் அமையும். ஆகவே, நமது நோக்கங்களை நிறைவேற்றும் வகையிலே விதிகளைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : விதிகள் செய்யும்பொழுது கூட இந்தக் கமிட்டியின் முன்னர் அவைகளை வைத்து, கமிட்டியின் ஆலோசனைகளைக் கேட்டுத்தான் முடிவு செய்யப்போகிறோம்.

* SRI R. KRISHNASAMI NAIDU : கனம் அமைச்சர் அவர்கள் நமக்கு திருப்திகரமான ஒரு பதிலைக் கொடுத்திருக்கிறார்கள். இந்த ஜில்லா அபிவிருத்திக் குழுவானது நல்ல வகையிலே செயல்படும்படி இந்த விதிகளைச் செய்வார்கள் என்று நினைக்கிறேன். நம்முடைய சக அங்கத்தினர் ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம் சொன்னதுபோல், இந்த ஜில்லா அபிவிருத்திக் குழுவிலுள்ள அங்கத்தினர்கள் கட்சி மாறுபாடு, கருத்து வேற்றுமையின்றி, ஜில்லாவினுடைய அபிவிருத்தியை மனதில் கொண்டு, பணியாற்றுவர்களேயானால், நல்ல வகையில் சேவை செய்யமுடியும். மேலும் அதிகாரத்தை பரவலாக பஞ்சாயத்துக்களுக்கும், பஞ்சாயத்து யூனியன்களுக்கும்—பஞ்சாயத்து யூனியன் கௌன்சில் என்று பெயரிடப் பட்டிருக்கிறது—கொடுத்திருக்கிறார்கள். பஞ்சாயத்து யூனியன் என்று இருந்தால் போதும் என்று கருதியிருந்தேன். இந்த நிலைமையிலே

அதைப் பற்றி திருத்தம் சொல்வதற்கு நான் தயாராய் இல்லை. ஜில்லா போர்டு செய்து வந்த வேலைகளை பஞ்சாயத்துகளுக்கும், பஞ்சாயத்து யூனியன்களுக்கும் பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கும் இந்த சந்தர்ப்பத்திலே, இந்த சட்டத்திலே கூறப்பட்டிருக்கிற நோக்கங்களின்படி, இது ஒரு அட்வைசரி கௌன்சிலாக அமையும், வேறு வழியில்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். ஹைஸ்கூல்களின் நிர்வாகத்திற்கு பஞ்சாயத்து சட்டத்தில் நல்ல வகையிலே ஏற்பாடுகள் செய்திருப்பதைப் பாராட்டுகிறேன். அது மசோதாவாக வரும்பொழுது அவற்றை நிர்வகிக்கும் கமிட்டிகள் எவ்வாறு அமைய வேண்டுமென்பதைப்பற்றி வேண்டிய ஆலோசனைகள் செய்து நிறைவேற்றும்படிக் கேட்டுக்கொண்டு, இந்த சட்டத்தை நான் வரவேற்கிறேன்.

**THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON** : கனம் சபாநாயகர் அவர்களே, நேற்று இந்த சபையில் கொண்டு வந்த மாவட்ட வளர்ச்சித் திட்ட மசோதாவின் பேரில் கனம் அங்கத்தினர்கள் பலரும் தங்களுடைய அபிப்பிராயங்களைத் தெரிவித்து, சில திருத்தங்களையும் கொண்டு வந்தார்கள். அவைகளை எல்லாம் நேற்றும் இன்றுமாக விவாதித்தோம். நலம் என்று கருதிய திருத்தங்களை ஏற்றுக்கொண்டு, இப்பொழுது நாம் ஒரு நல்ல முடிவுக்கு வந்திருக்கிறோம். இந்த மசோதாவின் விவாதத்தின் போது ஆலோசனை கூறியவர்களுக்கும், அதற்கு ஆதரவாயிருந்தவர்களுக்கும், இன்னும் பல நல்ல திருத்தங்களைக் கொடுத்து உதவியவர்களுக்கும், எல்லோருக்கும், எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**MR. SPEAKER** : The question is :

That the Madras District Development Councils Bill, 1958, as amended, be passed.

The motion was put and carried and the Bill as amended was passed.

## (4) THE MADRAS DISTRICT MUNICIPALITIES (AMENDMENT) BILL, 1958

**THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON** : Sir, I beg leave to introduce the Madras District Municipalities (Amendment) Bill, 1958[a], and move—

That the Bill be taken into consideration.

The ordinary elections to the Municipal Councils in the mufassal districts were last held in 1955. The term of office of the existing councillors which is three years under Section 8 (1) of the Madras District Municipalities Act, 1920, will expire on the noon of the 1st November 1958, by efflux of time. Under section 8 (2) (2) of the same Act, the ordinary elections will have to be conducted in August and September, 1958. It is found administratively difficult to conduct elections to Municipal Councils on the due dates on the top of the elections to a large number of Panchayats going on at present in the State.

The Legislature Committee on Local Administration, which was appointed to advice the Government in finalising the scheme of Reform of Local Administration in the State has not yet considered the proposals in the White Paper on the Reform of Local Administration in so far as they relate to district municipalities. It has recommended that the elections to municipal councils might

---

[a] Published in the *Fort St. George Gazette* Extraordinary, dated 30th August 1958.

9th September 1958] [Srimathi Lourdhammal Simon]

be postponed by six months and that elections might be held within that period as early as possible with reference to administrative convenience.

(Deputy Speaker in the Chair.)

There is no provision in the Madras District Municipalities Act, 1920, for the postponement of elections to Municipal Councils in such cases. It is, therefore, proposed to amend the Madras District Municipalities Act, 1920, for the purpose of postponing the ordinary elections to Municipal Councils by six months and for continuing in office the existing Councillors during the period of postponement. The postponement has become necessary mainly because these elections have to be undertaken in the same year in which several thousands of Panchayats have to be reconstituted on the basis of fresh elections. It is hoped that a major portion of the panchayat elections will be over by November-December, 1958. The Bill which is now before the House is intended to provide the statutory sanction necessary for these purposes. The sanction is sought for only a limited period, that is to say, up to the 30th April 1950. I can assure hon. Members that this is only an outer limit and the elections to Municipal Councils will be taken on hand immediately as soon as the elections to a considerable number of Panchayats are over.

I, therefore, move that the Madras District Municipalities (Amendment) Bill, 1958, be taken into consideration.

DEPUTY SPEAKER : Motion moved :

That the Madras District Municipalities (Amendment) Bill, 1958, be taken into consideration.

The motion is before the House for discussion.

* SRI V. K. KOTHANDARAMAN: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இப்பொழுது முனிசிபல் தேர்தல்களை ஆறு மாதங்களுக்கு ஒத்திப்போட வேண்டுமென்ற ஒரு திருத்த மசோதா சபை முன்பு இருக்கிறது. அதுபற்றி நான் சில அபிப்பிராயங்களை சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். ஆறு மாதங்களுக்கு முனிசிபல் தேர்தல்களை மேலும் ஒத்திப்போட வேண்டுமென்று பொறுக்குக் கமிட்டியில் இரண்டு மாதங்களுக்கு முன்னுலேயே முடிவு எடுக்கப்பட்டது. முதலில் இரண்டு வருஷங்களுக்கு இந்தத் தேர்தல்களை ஒத்திப் போட வேண்டுமென்று கூறப்பட்டது. பிறகு அதன் பேரிலே விவாதம் நடத்தப்பட்டு, தேர்தல் நடத்துவதற்கு அவகாசம் இல்லை, ஆகவே அதற்கு ஆறு மாதங்களாவது அவகாசம் வேண்டுமென்ற நோக்கத்தோடு இந்த மசோதா அனுமதிக்கப்பட்டது. இதுவரையில் முனிசிபல் தேர்தல்கள் நடப்பதற்கு என்னென்ன தயாரிப்புகள் வேண்டுமோ, அவைகளுக்கான எந்தவித அறிவிப்பும் நகர சபைகளுக்கு அனுப்பிவைத்திருப்பதாகத் தெரியவில்லை. எதற்கு இதைக் குறிப்பிடுகிறேன் என்று சொன்னுல், வார்டுகளை பிரித்து, அவைகளுக்கான வோட்டர்கள் ஜாபிதாவை தயாரிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் ஒன்றும் இதுவரையில் செய்யப்படவில்லை என்று நான் நினைக்கிறேன். சட்ட சபையின் பட்ஜெட் கூட்டம் அடுத்த மார்ச் அல்லது எப்ரலில் நடக்கக்கூடிய நிலைமை இருக்கிறது. ஆகவே, குறிப்பாக 6 மாதங்கள் அவகாசம் கொடுக்கப்பட்டிருந்தாலும்கூட, ஜனவரி மாதத்திற்குள் இந்தத் தேர்தல்களை முடிப்பது ரொம்பவும் நன்ருக இருக்கும். அதற்குள்ளாக கட்சி பாகுபாடு இல்லாமல் எல்லாக் கட்சிப் பிரதிநிதிகளேயும், ஆங்காங்கு இருக்கக்கூடிய பிரமுகர்களேயும் ஜில்லா

கலெக்டர்கள் தலைமையிலோ, அல்லது தாலுக்காக்களில் தாசில்தார்களின் தலைமையிலோ ஒன்று கூட்டி வார்டுகளை எந்த முறையில் பிரிக்க வேண்டுமென்பது பற்றி ஒரு திருப்திகரமான முடிவுக்கு வரவேண்டிய முறையிலே, இதிலே உடனடியாக சர்க்கார் கவனம் செலுத்தி ஒரு அறிக்கை அனுப்பவேண்டுமென்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அதோடு, இப்பொழுது பல இடங்களில்—எனக்குத் தெரிந்தவரையில் நான் கருதுகிறேன்—முஸ்லீம்கள் இருக்கக்கூடிய பகுதிகளை துண்டாடி, முஸ்லீம்கள் அல்லாதவர்கள் இருக்கக்கூடிய பகுதியோடு அந்தப் பகுதியை திணித்து வார்டுகள் பிரிக்கப்பட்டு, முஸ்லிம்கள் அங்கத்தினர்களாக வர முடியாத நிலைமை ஏற்படுத்தப்படுகிறது. அதுபோன்று தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கும் பகுதிகளும் துண்டாடப்பட்டு, வேறு பகுதிகளோடு இந்தப் பகுதிகள் சேர்க்கப்பட்டு வார்டுகளாக பிரிக்கப்படுகின்றன. இதனால் தாழ்த்தப்பட்ட மக்கள் எந்த அளவுக்கு அங்கத்தினர்களாக வராமல் போகமுடியுமோ அல்லது குறைவாக வரும்படி செய்யமுடியுமோ அந்த அளவுக்கு முயற்சிகள் எவ்வளவு உண்டோ அவ்வளவும் எடுக்கப்பட்டு, வார்டுகள் பிரிக்கப்பட்டு வருவதையெல்லாம் நாம் பார்க்கிறோம்.

**The Hon. Sri P. KAKKAN** : இதற்கு நீங்கள் ஒரு உதாரணம் கொடுக்க முடியுமா ?

**Sri V. K. KOTHANDARAMAN** : நீங்கள் வருகிறேன் என்று சொன்னால் நான் அந்த இடங்களை காட்டுவதற்கு தயார். வோட்டர்களுடைய ஜாபிதாவை பார்த்தாலே அதுவே சொல்லும். இந்த அளவுக்கு பாகுபாடு செய்யக் கூடிய நிலைமை இல்லாத அடிப்படையிலே, தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் சந்தர்ப்பம் இருக்கக்கூடிய நிலைமையிலே வார்டுகள் பிரிக்கப்படவேண்டும். மைனாரிடி மக்களுக்கு பாதுகாப்பு கொடுக்கிறோம் என்பது உண்மையானால் அவர்களுக்கு பிரதிநிதித்துவம் கொடுக்கவேண்டி அவர்கள் வசிக்கும் பகுதிகளை தனியாக வார்டுகளாக பிரிக்கவேண்டும். அது மட்டுமல்ல. சில பிரதேசங்கள் தொழிலாளர்கள் அதிகமாக வாழ்ந்துவரும் பிரதேசங்களாக இருக்கின்றன. பீடித் தொழிலாளர்கள், மில் தொழிலாளர்கள், கைத்தறி நெசவுத் தொழிலாளர்கள் இப்படி பலதரப்பட்ட தொழிலாளத் தோழர்கள் வாழும் பகுதிகள் இருக்கின்றன. தொழிலாளர்களுக்கு பிரதிநிதித்துவம் கொடுப்பதற்காக கார்பரேஷனில் தனித் தொகுதி ஒதுக்கப் பட்டிருக்கிறது. அதே போன்று அவர்களுக்கு நகர சபைகளிலும் பிரதிநிதித்துவம் கொடுப்பதற்காக, அவர்கள் தங்களுடைய பிரச்னைகளைப் பற்றி வாதாடுவதற்கு சந்தர்ப்பம் அளிப்பதற்காக, தொழிலாளர்கள் வாழக் கூடிய ஏரியாக்களை தனி வார்டுகளாக பிரித்து, அவர்களுக்கு என்று தனித் தொகுதி ஒதுக்குவது மிகவும் நலம் என்று கருதுகிறேன். ஆகவே, உடனடியாக நல்ல முறையிலே வார்டுகளை பிரிப்பதற்கு நடவடிக்கை எடுக்கப்படவேண்டும். அதேபோன்று வோட்டர்கள் ஜாபிதாக்களை தயாரிப்பதிலும் உடனடியாக கவனம் செலுத்தவேண்டும். இப்பொழுது 6 மாதங்கள் அவகாசம் கொடுக்கப்பட்டிருந்தும், மறுபடியும் இன்னும் 6 மாதங்கள் அவகாசம் நீடிக்கப்படவேண்டுமென்ற அளவுக்கு நிலைமை வாரமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்பதையும் தாழ்மையுடன் தெரிவித்துக் கொண்டு, இதோடு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

***Sri K. VINAYAKAM** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இப்பொழுது சபைமுன் கொண்டுவரப்பட்டிருக்கும் இச்சிறிய மசோதா, நடக்கவேண்டிய தேர்தலை 6 மாதங்களுக்கு ஒத்திவைக்கவேண்டுமென்ற ஒரே கொள்கையின் அடிப்படையில் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இப்பொழுது இருக்கிற முனிசிபல் கவுன்சிலர்களுக்கும், சேர்மன்களுக்கும் ஏதோ தேர்தல்களுக்கு பயந்து, இதை ஒத்திப்போட்டுக் கொண்டேவரவேண்டுமென்ற எண்ணம் இல்லை. அவர்கள் தேர்தல்களுக்கு நிற்பதற்கு தயாராக இருக்கிறார்கள். 6 மாதங்கள் தேர்தல்களை ஒத்திப்போடுவதற்கு ஏதாவது ஒரு காரணம் இருக்கவேண்டும். அந்தக்காரணம், அரசாங்கம் சொல்லுவது இப்பொழுது இருக்கிற பஞ்சாயத்து தேர்தல்களையெல்லாம் முடித்துவிட்டு பிறகு அதே அதிகாரிகளைக்கொண்டு முனிசிபல் தேர்தல்களை நடத்தலாம்

9th September 1958] [Sri K. Vinayakam]

இப்பொழுது முனிசிபல் தேர்தல்களை வைத்துக்கொள்வது சாத்திய மில்லை, ஆகவே, 6 மாதங்களுக்கு இந்தத் தேர்தல்களை தள்ளிவைக்க வேண்டுமென்பதுதான். இது பொருத்தமாக இருப்பினும்கூட, இந்தத் தேர்தல்களை பிப்ரவரி அல்லது மார்ச் மாதத்தில் நடத்தக்கூடாது. ஏனென் றால் இந்த மாதங்கள்தான் வரி வசூல் செய்கின்ற சீசன். அப்பொழுது முனிசிபல் உத்தியோகஸ்தர்களுக்கும் கமிஷனர்களுக்கும் நிறைய வேலை இருக்கும். அந்த நேரத்தில் இந்தத் தேர்தல்களையும் வைத்துக்கொண்டால், அந்த வேலையும் சரியாக நடக்காது, தேர்தல்களும் சரியாக நடக்காது. ஆகவே, தேர்தல்களை 6 மாதங்களுக்குள் நடத்தவேண்டுமென்று சொன் னாலும், "Even though it is an outer limit" இதை டிசம்பர் மாதத்திலேயே நடத்தி விடுவது நியாயம் என்று தோன்றுகின்றது. அது நிர்வாக வசதியைப் பொறுத்திருக்கின்றது.

வார்டுகளை பிரிக்கவேண்டுமென்று சொல்லுவது ஒரு நியாயமான பிரச்னை யாகும். "இர்ராஷனல் டிவிஷன்" இருக்கிறது இப்பொழுது. முன்பு செய்த வார்டுகள் 10 அல்லது 15 வருடங்களுக்கு முன்பு செய்தது. அந்த சூழ்நிலைக்கு ஏற்ப செய்யப்பட்டதாகும். இப்பொழுது பல வார்டுகளில் அதிக மான பேர்கள் இருக்கிறார்கள். அந்த நிலைமை சென்னையில் நிதர்சன மாக இருக்கிறது. அதை சென்னை பொறுத்த பில் வரும்போது கவனிக் கலாம். 12-30 p.m.

வோட்டர் ஜாபிதா குறித்து இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும் புகிறேன். சென்ற தேர்தலில் நின்ற அங்கத்தினர்கள் அதை நன்கு அறிவார்கள். ஆனால் குறிப்பாக இரண்டொரு வார்த்தை மட்டும் சொல்ல விரும்புகிறேன். அது பொதுத் தேர்தலின் போது "as a basis" ஆக வைத்து தேர்தல் நடந்தது. அதற்குப் பிறகு, "additions" and "deletions" என்று ஆறு லிஸ்டுகள் வந்து இருக்கின்றன. வருகிற நவம்பரில் ஒரு லிஸ்டு தயார் செய்யப் போகிறார்கள். ஆக ஏழு லிஸ்டுகளை வைத்துக்கொண்டு, நீக்குவது சேர்ப்பது எல்லாம் செய்த பிறகு, பைனல் லிஸ்டு தயார் செய்து தேர்தல் நடக்கும். தேர்தலில் நின்றவர்களுக்குத் தெரியும் இந்த லிஸ்டுகள் எவ்வளவு தூரம் தொந்தரவு கொடுக்கின்றன என்று. வோட்டர் "ராமசாமி முதலியார்" என்று இருக்கும். அவ னுடைய "பால்", ஆணு, பெண்ணு என்பதன்கீழ், "பெண்" என்று இருக்கும். அவர் நேரே வோட்டுப் போடப்போவார். அதற்கு முன்பாகவே அவர் யாருக்கு வோட்டுப் போடுவார் என்பது அநேகமாகத் தெரிந்திருக் கும். ஆகவே எதிர்க்கட்சிகாரர்கள், லிஸ்டுப்படி, அவர் பெண் என்று மறுப்பார்கள். "It is a valid objection". ஒரு அம்மை யாரின் பெயர் பார்வதி அம்மாள் என்று இருக்கும். அவள் புருஷன் பெயர் அப்துல் காதர் என்றிருக்கும். சென்னை வோட்டர்கள் ஜாபிதாவில் இவையெல்லாம் ரொம்ப சாதாரணம். அந்த அம்மையார் வோட்டுப் போட வந்து, புருஷன் பெயர் என்னவென்று பார்த்தால், அது அப்துல் காதர் என்றிருக்கும். அந்த அப்துல் காதரின் மனைவி லிஸ்டில் கோவிந் தம்மா என்று இருக்கும். இதைப் போன்ற எத்தனையோ ஆபாசங்கள் நேர்ந்திருக்கின்றன. இன்னொன்று. வோட்டர் லிஸ்டில், 52-வது எண்ணி லிருந்து 782 என்ற எண் வரை நீக்கிவிடு என்று உத்திரவு போட்டுவிடுவார். வோட்டர் ஜாபிதாவைச் சரி செய்ய நியமிக்கப்பட்டவர், இருந்த இடத்தில் இருந்து கொண்டே இம்மாதிரிச் சொல்லிவிடுவார். அந்த அதிகாரிகள் தெருதெருவாகச் சுற்றி அலைந்து இதையெல்லாம் செக் செய்யமாட்டார். அவரால் அது முடியாது. ஆகவே அவர் ஒரு திண்ணையில் உட்கார்ந்த படியே, 700 சில்லரை வோட்டுகளைத் தீர்த்துக் கட்டிவிடுவார். சென்னையில் always we have seen this. இந்த தெருவிலிருந்து அந்தத் தெருவரை 500, 600 வோட்டர்களை எடுத்து விடு என்றால் அது எவ்வளவு சரியானது என்று யோசிக்க வேண்டும். ஒரு தெருவில் இரண் டொருவர் மாறி இருக்கலாம். அங்கு ஆள் இருக்கமாட்டான். இங்கிருப் பவன் மாம்பலத்திற்குப் போயிருப்பான். அவ்வளவுதான்.

DEPUTY SPEAKER: I want the hon. Member to be brief.

* SRI K. VINAYAKAM : பொருத்தமாகத்தான் சொல்லுகிறேன். ஆறு மாதத்தில் பஞ்சாயத்து தேர்தல்கள் நடைபெறும். அந்த உத்யோகஸ்தர்களை வைத்துக் கொண்டே இந்தத் தேர்தலையும் நடத்தலாம் என்கிறார்கள். இதை யெல்லாம் வோட்டர்லிஸ்டை ரேஷனலைஸ் செய்து நடத்த வேண்டும். திரும்பவும் பழைய வோட்டர் லிஸ்டையே கொடுத்து, ஆறு அடண்டாவையும் கொடுத்தால் மறுபடியும் அந்த அப்துல் காதர், கோவிந்தம்மாதான் வரும். பெரும்பாலும் செத்துப் போனவர்கள் பெயர்கள் அப்படியே இருக்கின்றன. புது வோட்டர்கள் பெயர்கள் சரியாக சேர்க்கப்பட்டிருப்பதில்லை. வேடிக்கையல்ல. ஒரு உண்மைச் சொல்ல விரும்புகிறேன். சமீப தேர்தலில், நான் நின்ற தியாகராஜ நகர் தொகுதியில், ராஜகோபாலாச்சாரியார் பெயர் லிஸ்டில் இல்லை. அவர் காங்கிரஸ்காரர் தானே என்று ராஜாஜியிடம் சென்று, என்ன சண்டைகள் இருந்தாலும், நீங்கள் எனக்கு வோட்டுப் போடவேண்டும் என்றேன். . . .

DEPUTY SPEAKER : The hon. Member may be brief. Let him refer to the Bill under discussion.

SRI K. VINAYAKAM : I am speaking about the voters' list.

DEPUTY SPEAKER : I think it is all out of place. This is a small Bill regarding the extension of the period and nothing else. So, the hon. Member need not go into the details of other things. I have already asked him to be brief and to talk on the Bill under consideration.

SRI K. VINAYAKAM : All right, Sir. செத்துப் போனவர்கள் பெயர்களை அகற்றி, உயிரோடு இருப்பவர்கள் பெயர்களைச் சேர்த்து, அந்த முறையில் லிஸ்டைத் திருத்தி, அதன் பிறகு தேர்தல் வரவேண்டும் என்பதை அரசாங்கம் கவனிக்கவேண்டும் என்று விரும்புகிறேன்.

SRI N. MARUDACHALAM : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, முனிசிபல் தேர்தல் நவம்பர் மாதம் நடக்க வேண்டியது. அதை ஆறு மாதம் ஒத்திப்போட வேண்டும் என்று குறிப்பிட வேண்டிய அவசியமே இல்லை என்பது என் அபிப்பிராயம். காரணம், பஞ்சாயத்துத் தேர்தல் வருவதால், இதை ஒத்திப் போட வேண்டும் என்று கோரப்படுகிறது. பஞ்சாயத்துத் தேர்தலுக்கும், இதற்கும் சம்பந்தமே இல்லை. பஞ்சாயத்துத் தேர்தல் வருவதால் என்று சொல்லுகிறது மிகவும் சரியில்லை என்பது என் அபிப்பிராயம். இப்பொழுது பஞ்சாயத்துத் தேர்தல் வருவதனால், ஜனவரி மாதத்திலேயே, தேர்தல் முடிந்த பிறகு, வார்டுகளைப் பிரிக்க வேண்டும் என்று தெரிகிறது. வார்டு பிரிப்பதில் இருக்கும் ஊழல்கள், தாழ்த்தப்பட்ட மக்களும், ஹரிஜனங்களும் தேர்தலில் வரமுடியாது. அமைச்சர் சொன்னார்கள், ஒரு உதாரணம் காட்ட முடியுமா என்று. கோவை ஜில்லாவில், ராமநாதபுரம் என்று ஒரு ஊர் இருக்கிறது. 52-க்கு முன்னால் அங்கே ஒரு ஹரிஜன மெம்பர் கவுன்சிலுக்கு வந்திருந்தார். அதன் பிறகு, வார்டு பிரித்ததனால், அவர் பிறகு வர முடியவில்லை. அதற்குக் காரணம், ஜாதி ஹிந்துக்கள் பாதி, ஹரிஜனங்கள் பாதி என்று பிரிந்ததால்தான். ஆகவே அந்தந்த பகுதியிலே, ஹரிஜனங்கள் வருவதற்கான சந்தர்ப்பங்களை உண்டாக்க வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் முனிசிபாலிடியிலேயே தங்கள் அபிப்பிராயங்களைச் சொல்ல முடியும். தங்கள் பகுதிகளிலுள்ள குறைபாடுகளை எடுத்துச் சொல்ல சந்தர்ப்பம் ஏற்படும். வார்டுகள் பிரிக்கும் தருணத்தில், பெருவாரியாக ஹரிஜனங்கள் வருவதற்கு ஏற்றதாகப் பார்த்துச் செய்யவேண்டும். தேர்தலை ஜனவரி மாதத்திலேயே நடத்த வேண்டும் என்பது என் அபிப்பிராயம்.

* SRIMATHI SAVITHRI SHANMUGAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த நகராண்மைக் கழக மசோதாவை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இதில்

முக்கியம், தேர்தலை ஆறு மாதத்திற்கு ஒத்தி வைக்கப்படுகிறது. காரணம், இன்று பல இடங்களிலே பஞ்சாயத்து தேர்தல் நடக்காமல், கஷ்டமாக இருப்பதால், ஆறு மாதம் இந்தத் தேர்தலை ஒத்தி வைக்கவேண்டும் என்று மசோதா கோருகிறது. இதற்கு முன்பு பொறுக்குக் கமிட்டியில், இந்தத் தேர்தலை இன்னும் இரண்டு வருஷம் தள்ளி வைக்கவேண்டும் என்று அபிப்பிராயம் இருந்தது. ஆனால், இன்று அது தவிர்க்கப்பட்டிருக் கிறது. நான் ஒன்று கூற விரும்புகிறேன். இனிமேல் இந்தத் தேர்தல் மூன்று வருஷத்திற்கு ஒரு முறை என்றில்லாமல், ஐந்து வருஷத்திற்கு ஒரு முறை என்று இருக்க வேண்டும் என்பது என் யோசனை.

மூன்று வருஷம் மிகவும் குறுகிய காலமாக இருப்பதால் நகர சபையில் அங்கம் வகிக்கக்கூடிய அங்கத்தினர்கள்—அவர்களுக்கு அதிகப்படியான பொறுப்பு இருக்கிறது—அவரவர்களுடைய வார்டுகளில் இருக்கக்கூடிய அத்தியாவசிய வேலைகளை சரிவரச் செய்வதற்கு தகுந்த அவகாசம் இல்லாத தால் கூடுமானவரையில் அவர்களுடைய அங்கம் வகிக்கும் காலம் ஐந்து வருஷங்களுக்காவது வைக்கவேண்டும் என்று இந்த சந்தர்ப்பத்தில் யோசனை சொல்ல விரும்புகிறேன். 12.40 p.m.

இன்னும் ஆறு மாதங்கள் தேர்தலைத் தள்ளிப்போடப் போவதாகச் சொல்லப்படுகிறது. இதைப்பற்றி இன்று வரையிலும் நகர சபைகளுக்கோ அல்லது நகர சபை அதிகாரிகளுக்கோ தகவல் கிடைத்ததாக இல்லை. தேர்தல் நடக்க வேண்டும் என்றால் அதற்கு அநேகம் சிரமங்கள் இருந்து கொண்டு வருகின்றன. பொதுவாக கமிஷனரை எடுத்துக்கொண்டால் அவர்களுக்கு நகர சபையின் வேலைகளையே கவனிப்பதற்கு நேரம் இல்லா மல் இருக்கிறது. அதோடு தேர்தல் வேலைகளையும் கவனிக்க வேண்டு மென்றால் மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அதனால் கூடிய சீக்கிரத்தில் அவர்களுக்கு தேர்தல் நடத்தப்படும் என்ற தகவலை, அதாவது அரசாங்கம் எப்பொழுது தேர்தலை நடத்த வேண்டும் என்று யோசனை செய்து இருக் கிறதோ அதை குறுகிய காலத்தில் அவர்களுக்கு அறிவிக்கும்படியாக நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நகர சபைகளில் வார்டுகளைப் பிரிப்பது என்பது ஒரு பெரிய பிரச்னை யாக இருக்கிறது. இப்பொழுதுள்ள நகர சபைகளில் சில வார்டுகள் பெரிய வார்டுகளாகவும் சில வார்டுகள் ஜனத் தொகையில் மிகவும் குறைவாகவும் இருந்து கொண்டிருக்கிறது. ஆனால் இப்பொழுது இரண்டு லட்சம் ஜனத் தொகைக்கு மேற்பட்ட ஒவ்வொரு முனிசிபாலிட்டியிலும் 42 ஸ்தானங்கள் வைக்கலாம் என்ற ஒரு அபிப்பிராயம் இருப்பதாகத் தெரிய வருகிறது. அதில் முக்கியமாக பெண்களுக்கு ஒரு சில ஸ்தானங்களை ஒதுக்கி வைத்துக் கொண்டு வருகிறார்கள். அதே போன்று சில குறிப்பிட்ட ஸ்தானங்களை பெண்களுக்கு என்று ஒதுக்கி வைக்க வேண்டும் என்று பெண்களின் சார்பாக கேட்டுக்கொள்கிறேன். பொது ஸ்தானங்களில் பெண்களும் கலந்து கொள்ளலாம் என்ற வசதி இருந்தாலும் கூட தனிப்பட்ட சில ஸ்தானங்களை பெண்களுக்கு என்று ஒதுக்கி வைக்க வேண்டும் என்று இந்த நேரத்தில் நான் கேட்டுக்கொள்கிறேன்.

நகர மக்களுடைய பொறுப்புகளை கவனிப்பதற்கு நகர சபைக்கு அதிகப் படியான பொறுப்பு இருக்கிறது. தங்களுடைய பொறுப்பை உணர்ந்து நகர சபை அங்கத்தினர்கள் தங்களுடைய வேலைகளைச் செய்ய வேண்டிய தாக இருக்கிறது. அப்படி அவர்கள் நல்ல முறையில் வேலை செய்ய வேண்டுமானால் கூடிய சீக்கிரத்தில் தேர்தல்களை நல்ல முறையில் நடத்தி எல்லோருக்கும் சாதகமாக நகர சபைகளை அமைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

**Sri P. S. K. LAKSHMIPATHIRAJ :** கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இன்று நகர சபை தேர்தலை ஒத்தி வைக்க வேண்டும் என்று கொண்டுவரப்பட்டிருக்கும் மசோதாவின்மீது சில வார்த்தைகளைப் பேச விரும்புகிறேன். நகர சபை தேர்தல்களை வெகு

துரிதமாக நடத்த வேண்டும் என்பது எல்லோருடைய விருப்பம் ஆகும். ஆனால் அரசாங்கம் இந்தத் தேர்தலை ஒத்தி வைக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறது என்ற தோரணையில் சில அங்கத்தினர்கள் பேசினார்கள். அப்படிப் பேசியது ஏன் என்று எனக்குப் புரியவில்லை. இப்பொழுது பார்த்தால் ஏறக்குறைய அரசாங்கத்தின் வேலை தேர்தல்களை நடத்துவதாகத்தான் இருக்கிறது. தேர்தல்களை நடத்துவதுதான் அரசாங்கத்திற்குச் சரியாக இருக்கிறது. நகர சபை தேர்தல்கள், பஞ்சாயத்து போர்டு தேர்தல்கள், ஜில்லா போர்டு தேர்தல்—அதுதான் ஒழிந்து போய்விட்டது அதைப்பற்றி பேசி பிரயோஜனம் இல்லை—அது போக சட்ட சபை தேர்தல், அவரவர்களுடைய கட்சித் தேர்தல்கள் இப்படிப்பட்ட பலவிதமான தேர்தல்கள் சுற்றிச் சுற்றி வந்துகொண்டேதான் இருக்கின்றன. ஆகவே இந்தத் தேர்தலை இன்னும் ஆறு மாத காலம் ஒத்தி வைக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்பதைக் கண்டு கூட ஒரு வகையில் நான் திருப்திப்படுகிறேன். ஆனால் இப்பொழுது ஆறு மாதங்கள் என்று சொல்லும் போது செய்ய வேண்டிய வேலைகள் மிகவும் அதிகமாக இருக்கின்றன.

இப்பொழுது நகர சபைகள் எடுத்திருக்கும் ஜாப்தாவைப் பார்க்கும் போது, எனக்கு முன்னதாகப் பேசிய கனம் விநாயகம் அவர்கள் சொன்னது மிகவும் பொருத்தமாக இருக்கிறது. உயிருடன் இருக்கிறவர்களுடைய பெயர்கள் குறைவாகவும் காலம் சென்றவர்களுடைய பெயர் அதிகமாகவும் வோட்டர் ஜாப்தாவில் இருக்கிறது. வோட்டர் ஜாப்தாவை தயாரிக்கும் போது பெரிய தவறுகள் நடந்து விடுகின்றன. ஒரு செட்டியார் சராப்புக் கடை வைத்திருந்தால் அவர் கசாப்புக் கடை வைத்திருப்பதாக ஜாப்தாவில் காணப்படுகிறது. அதனால் அவர் வோட்டுச் செய்யப் போகும்போது பல தகராறுகள் ஏற்படுகின்றன. ஒரு பெண்மணி வோட்டுப் போடும்போது பார்த்தால் அந்த அம்மையாருடைய பெயரைப் பார்த்தால் அந்த அம்மையாருடைய வயது ஒரு விதமாக எழுதப்பட்டிருக்கும். ஆனால் அந்த அம்மையாரைப் பார்த்தால் வயது ஒரு மாதிரியாக இருக்கும். அதனால் அந்த அம்மையார் என்ன சொன்னாலும் கட்சி மனப்பான்மையில் தகராறு செய்வதால் அவளால் வோட்டுச் செய்ய முடிவதில்லை. ஜாப்தா வயதிற்கும் அந்த அம்மையாரின் வயதிற்கும் வித்யாசம் இருக்கிறது. அந்த அம்மையார் என்ன சொல்லிய போதிலும் அதிகாரிகள் கேட்க மாட்டேன் என்கிறார்கள். அதனால் அந்த அம்மையாரை வோட்டுப் போட விடாமல் செய்து விடுகிறார்கள். அதோடு வோட்டர்களைப் பதிவு செய்யக்கூடிய சில உத்தியோகஸ்தர்கள் நகரத் தெருக்களில் சென்று அவர்கள் சரியான முறையில் ஜாப்தா எடுப்பதற்கு முடியவில்லை. அவர்களுக்கு அது ரொம்பவும் துர்லபமாக இருக்கிறது. அதன் காரணமாக அவர்கள் எழுதுகிற ஜாப்தாவில் பல தவறுகள் ஏற்படுவதற்கு காரணமாக இருக்கிறது.

வார்டுகள் பிரிவினையில் கூட கட்சி தகராறுகளினால் கட்சி அடிப்படையில் சில நபர்கள் அதைக் காட்டி தப்புத் தகராறுகள் ஏற்படுகின்றன. இதைப் பற்றி எனக்கு முன் பேசிய சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். ஹரிஜனங்களுக்கு வசதி கிடைப்பதில்லை என்றும் அவர்கள் தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்டு வர முடியாமலும், சில முஸ்லீம் போன்ற சிறுபான்மையோர் தேர்தல்களில் வெற்றி பெற்று வர முடியாமல் இருப்பதற்கு சதி செய்து வருவதாகவும் சொன்னார்கள். இப்படிப்பட்ட சதி நடப்பது எவ்வளவு தூரம் உண்மை என்பது கவுன்சில்களில் அங்கம் வகிக்கும் நகர சபை அங்கத்தினர்களுக்கு நன்றாகத் தெரியும். இப்பொழுதுள்ள நகர சபைகளை எடுத்துக் கொண்டால் ஹரிஜனங்களுக்கு கிடைக்க வேண்டிய ஸ்தானங்களை விட அதிகமாக கிடைத்திருக்கிறது என்பது நன்றாகத் தெரிய வரும். ஏறக்குறைய அரை நூற்றாண்டுகளாக ஹரிஜனங்களுக்கு எப்படிப்பட்ட சலுகைகள் கொடுக்கப்பட்டு வருகின்றன என்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். எவ்வளவோ இடங்களில் பொது தொகுதியில் கூட ஹரிஜனங்கள் வெற்றி பெற்று வந்திருக்கிறார்கள் என்பது நன்றாக தெரிய வரும் என்பதை அவர்களுடைய ஞாபகத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். அதனால் ஹரிஜனங்களுக்கு என்று தனியாக சலுகைகள்

கொடுக்க வேண்டிய அவசியமே ஏற்படவில்லை. வோட்டர் ஜாபிதாவில் கூட அவர்களுடைய பிரதிநிதித்துவத்திற்கு அதிகப்படியாகவே அங்கே இருக்கிறது. இப்பொழுது தேர்தலை ஆறு மாத காலம் ஒத்தி வைக்கவேண்டும் என்று ஒரு மசோதாவைக்கொண்டு வந்திருக்கிறார்கள். அதை நன்றாக பரிசீலனை செய்து நகர சபைகளில் இருக்கக்கூடிய அதிகார வரம்புகளையெல்லாம் ஒழுங்குப்படுத்தி மசோதாவைக் கொண்டுவந்தால் அதை மிகவும் பாராட்டலாம். இப்பொழுது நகர சபையில் இருப்பது என்ன? நகர சபைகளுக்கு இப்பொழுது அதிகாரமே இல்லாமல் இருக்கிறது. தேர்ந்தெடுக்கப்பட்டு நகர சபை அங்கத்தினர்களாக வந்தாலும் அவர்களுக்கு எந்த விதமான அதிகாரமும் கிடையாது. அங்குள்ள அங்கத்தினர்களும் சரி தலைவரும் சரி தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு நகர சபையில் நகரத்திலுள்ள விஷயங்களைப்பற்றி விவாதிப்பதற்கு அதிகாரம் இருக்கிறதேயொழிய வேறு எந்த விதமான அதிகாரங்களும் அவர்களுக்குக் கிடையாது. வேறு எந்த விதமான பிடிப்பும் அவர்களுக்குக் கிடையாது. சேர்மனுக்கு வேண்டிய அதிகாரங்கள் கிடையாது. அவர் ஒரு பொம்மையைப்போல்தான் வீற்றிருக்கிறார். அவருடைய தலைமையின் கீழ் அங்கத்தினர்கள் தீர்மானங்களை நிறைவேற்றுவதுதான் அவர்களுடைய வேலை.

DEPUTY SPEAKER: I want to draw the attention of the hon. Member to the fact that he is going out of the way. It is not necessary for him to speak on these points now.

SRI P. S. K. LAKSHIMIPATHIRAJ : இப்பொழுது ஆறு மாதங்கள் ஒத்தி வைக்க வேண்டும் என்று சொல்லும்போது இன்னும் சீக்கிரமாகவே அதைக் கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். வோட்டர் ஜாப்தாவில் பல தவறுகள் இருக்கின்றன. அவைகளையெல்லாம் அதற்குள் ஒழுங்குப்படுத்த வேண்டும். சில வட்டாரங்களில் கனம் மந்திரி அவர்கள் சென்று நேரில் பார்த்தால் இவைகளைப் பற்றி யெல்லாம் நன்றாகத் தெரியவரும். சில நகர சபைகள் அபிவிருத்தி அடைந்திருக்கின்றன. அவைகளை யெல்லாம் நன்றாகப் பார்வையிட்டு வேண்டியதைச் செய்யவேண்டும். நகர சபை வகுப்பதில், வார்டுகளைப் பிரிப்பதில் ஒரு குறிப்பிட்ட ஜாதிக்கு ஸ்தானம் கிடைக்காத அளவில் அங்கே யெல்லாம் வார்டுகள் பிரிக்கப்படுவதை தடுக்க வேண்டும். ஒரு வட்டாரத்தில் மைனாரிட்டியாக இருந்தாலும் அவருக்கு தேர்தலில் ஸ்தானம் கிடைக்கும் அளவில் ஜாப்தாவை தயாரிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். ஒரு வட்டாரத்தில் ஒரு குறிப்பிட்ட ஜாதி வராமல் இருப்பதற்கு வேண்டிய சதிகள் நடப்பதைத் தடுத்து அந்த முறையில் வார்டுகளை அமைக்க வேண்டும். அப்படி பிரயத்தனம் செய்கிறவர்களுக்கு இடம் கொடுக்கக் கூடாது. ஒரு சமுகம் மைனாரிட்டி சமுகமாக இருந்தாலும் அந்த சமுகத்திற்கு இடம் கிடைக்கும் அளவில் வார்டுகளை பிரித்து அமைக்க வேண்டும். அந்த அளவில் பிரதிநிதித்துவத்தையும் திருத்தி அமைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். ஆகவே வார்டுகளை அமைப்பதில் கனம் மந்திரி அவர்கள் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI J. MATHA GOWDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே இந்த மசோதாவை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். நகரசபைத் தேர்தலை ஒத்திவைக்கவேண்டுமென்று மந்திரி அவர்கள் மசோதா கொண்டு வரும்போது, சிலர் ஏதோ நினைக்கிறார்கள். இப்பொழுதுள்ள நகரசபை அங்கத்தினர்களுக்காகப் பரிந்துகொண்டு ஆறு மாதம் தேர்தலை தள்ளி வைத்திருக்கிறார்கள் என்று நினைக்கிறார்கள் போலும். என் உடனடியாக நகரசபைத் தேர்தலை நடத்திவிடக் கூடாது என்று கூட சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். நகரசபைத் தேர்தலை நடத்துவதுபற்றி யாருக்கும் எந்தவிதமான பயமும் இல்லை. நகரசபைத் தேர்தலை

[Sri J. Matha Gowder] [9th September 1958

நடத்துவதற்கு இருக்கக்கூடிய சிக்கல், கஷ்டம் என்னவென்ருல், இப்பொழுது பஞ்சாயத்துக்களுக்கே தேர்தல் நடந்து இன்னும் பூர்த்தியடையவில்லை. கிராமப் பஞ்சாயத்துக்களுக்கு தேர்தல் பூர்த்தியடைவதற்குள்ளேயே நகரசபைக்கும் தேர்தல் நடத்துவது என்பது மிகவும் சிரமமாக இருக்கிறது. பஞ்சாயத்துத் தேர்தலுக்கும் நகரசபை தேர்தலுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்று சில அங்கத்தினர்கள் கேட்டார்கள். பஞ்சாயத்துத் தேர்தலை நடத்துபவர்களும் அதிகாரிகள் தான், நகரசபைத் தேர்தலை நடத்துபவர்களும் அதிகாரிகள்தான். இரண்டுவித சபைகளுக்கும் தேர்தலை ஒரே அதிகாரிகள்தான் போய் நடத்த வேண்டுமென்று நிலைமை இருக்கும்போது இரண்டு சபைகளுக்கும் தேர்தல் நடத்துவது என்பது சிரமமாக இருக்கும் என்ற காரணத்தினுல்தான் நகரசபைத் தேர்தலை ஆறு மாத காலத்திற்கு இந்த மசோதாவின் மூலம் ஒத்திவைக்கிருர்களே தவிர, வேறு எதற்காகவும் அல்ல என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

ஆறு மாதங்கள் என்று மசோதாவில் கண்டிருந்தாலும், ஆறு மாத முடிவு வரைக்கும் காத்திருக்க வேண்டியதில்லை. ஒன்றிரண்டு மாதங்களுக்குள்ளேயே தேர்தலை நடத்திவிட வேண்டுமென்பதுதான் எண்ணம். எவ்வளவு சீக்கிரமாக தேர்தலை நடத்திவிடவேண்டுமோ அவ்வளவு சீக்கிரமாக நடத்திவிட வேண்டும் என்றுதான் மசோதாவிலே கண்டிருக்கிறது. ஆகையால், இந்த ஆறு மாதங்களுக்கு முன்பாகவே தேர்தல் பூர்த்தியடைந்துவிடும். ஜனவரியிலோ, பிப்ரவரியிலோ கூட தேர்தல் முடிந்துவிடலாம்; ஆறு மாதங்கள் வரைக்கும் இருக்கும் என்று அபிப்பிராயப்பட வேண்டிய அவசியம் இல்லை.

வார்டு பிரிக்கும்போது ஹரிஜனங்கள் அதிகமாக வசிக்கும் இடத்தை இரண்டாகப் பிரித்து, ஹரிஜனங்களுக்குச் சரியான பிரதிநிதித்துவம் இல்லாமல் செய்கிருர்கள் என்ற குற்றத்தையும் சுமத்தினுர்கள். ஹாிஜனங்களுக்கு ரிசர்வ் சீட் ஒதுக்கியிருக்கிருர்கள். முனிசிபாலிடியாக இருந்தாலும் ரிசர்வ் சீட் இருக்கும்போது அவர்களுக்கு எந்தவிதமான பாதகமும் செய்வதில்லை. அப்படி பாதகம் செய்வதாக இதுவரை யாரும் பார்த்ததில்லை. வார்டுகள் பிரிக்கும்போது, வார்டுகளைப் பிரிக்கக்கூடிய அதிகாரிகள் ஏதோ தவறுதலாகப் பிரிக்கிருர்கள் என்ருல், அதைக் கவனிக்கலாமே யொழிய, ஏதோ தவறுதல் செய்வதாகக் கூறுவது சரியல்ல. ஐந்நூறு, ஆயிரம், இரண்டாயிரம் என்று வீடுகள் இருந்தால், அவைகளைப் பிரிக்கும்போது, அவைகளில் சில ஹரிஜனங்களுடையதாக இருக்கலாம், சில இந்துக்களுடையதாக இருக்கலாம். அதை வைத்துக் கொண்டு பேசுவது சரியல்ல. அப்பேர்ப்பட்ட தவறுதல் ஏற்பட்டால் சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் எடுத்துச் சொல்லி சிக்கலைத் தீர்ப்பது நியாயம். ஏதோ மைனுரிடி வகுப்புகளுக்குப் பாதகம் செய்யவேண்டிய அளவில் வார்டுகளைப் பிரித்திருக்கிருர்கள் என்பதை ஒப்புக் கொள்வதற்கில்லை.

வோட்டர்கள் ஜாபிதாவைப்பற்றி சொல்லப்பட்டது. அதை நாம் புதுப்பிக்க வேண்டியது அவசியம்தான். புதுப்பிக்க வேண்டுமென்று சொல்லும் அதே நேரத்தில், தேர்தலை உடனடியாகக் கொண்டுவரவேண்டுமென்று சொல்வது இயலாத காரியம். வோட்டர்கள் ஜாபிதாவைக் கூடிய சீக்கிரத்தில் புதுப்பிப்பதோடு கூட, எல்லாவற்றுக்கும் ஒரே ஜாபிதாவாக செய்வது நல்லது என்று எல்லோரும் அபிப்பிராயப்படுகிருர்கள். இருபது வயதுக்குள்ள தாய்க்கு 70 வயதுள்ள மகள் என்பது போன்ற பிழைகளெல்லாம் வோட்டர் ஜாபிதாவில் காணப்படுகின்றன என்றெல்லாம் குறிப்பிடப்பட்டது. இப்படி பல குறைகளை எடுத்துச் சொன்னுர்கள். அவைகளையெல்லாம் திருத்தவேண்டும். இப்படி வயது முதலிய சிறு தவறுகள் இருந்தாலும், அதைப்பற்றி அதிகாரிகள் பொருட்படுத்த வேண்டியதில்லை, வோட்டு போடுவதற்கு அனுமதிக்கலாம் என்பதற்கு பஞ்சாயத்துச் சட்டத்திலோ முனிசிபல் சட்டத்திலோ இடம் இருக்கிறது என்று நினைக்கிறேன். அதை ஓரளவு பரிசீலனை செய்து திருத்துவதற்கான பொறுப்பை ஒரு அதிகாரியின் கையிலே ஒப்படைக்கவேண்டும்.

9th September 1958] [Sri J. Matha Gowder]

சென்ஸஸ் எடுக்கும்போது என்ன செய்கிருர்கள். கிராம அதிகாரிகள் ஒரு பதினைந்து நாட்களுக்குள் சேகரித்துக் கொடுக்க வேண்டுமென்று கலெக்டர் தாசில்தாருக்கு உத்தரவு கொடுக்கிருர்கள். இல்லாவிட்டால் அவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்கப்படும் என்று நோட்டீஸ் கொடுப்ப தால், கிராம அதிகாரிகள் இடத்திற்கே போகாமல் ஏதோ கழித்துக் கூட்டி, சிலரை இறந்ததாகவும் எழுதி ஜாபிதாவை பைனலைஸ் செய்து தாலுகா ஆபீசுக்கு அனுப்பிவிடுகிருர்கள். இதனுல்தான் தவறுதல்கள் காணப் படுகின்றன. அவர்களுக்கு அதிக நாள் கொடுத்து பரிசீலனை செய்யும்படி யாகக் கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக் கொள் கின்றேன்.

*SRI M. P. SARATHI: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, பஞ்சாயத்துக்களுக்குத் தேர்தலை நடத்தி முடிப்பதற்காக முனிசிபாலிடி களுக்கான தேர்தலை ஆறு மாத காலம் ஒத்திவைக்க வேண்டுமென்று கொண்டுவந்த இந்த மசோதாவின்மீது சில கருத்துக்களைச் சொல்லலாம் என நான் நினைக்கின்றேன்.

ஏறக்குறைய அக்டோபர் மாதம் 30-ந் தேதி வரையில் இப்பொழுதுள்ள முனிசிபாலிடிகளுக்கெல்லாம் ஆயுள் காலம் இருக்கிறது. நவம்பர் மாதம் 1-ந் தேதிக்குப் பிறகு, ஏறக்குறைய ஆறு மாத காலம் வரையில் ஒத்தி வைக்கலாம் என்று கொண்டு வந்திருப்பதற்குப் பதிலாக, ஏன் அந்த முனிசிபாலிடிகளை யெல்லாம் கலைத்துவிட்டு, கமிஷனர் மூலமாகவே முனிசி பாலிடியின் அலுவல்களைக் கவனித்துவரச் செய்யக்கூடாது என்று நான் கேட்கின்றேன். தேர்தல் நடக்கும் வரையில், இரண்டு அல்லது மூன்று மாதம் கமிஷனர்களே நிர்வாகத்தை நடத்திக்கொண்டிருக்கலாம் என்று யோசனை தெரிவித்துக்கொள்கிறேன். ஏனென்ருல், முக்கியமாக இப்பொ ழுது கமிஷனருடைய நிர்வாகத்தில் தான் பெரும்பாலும் முனிசிபாலிடிகள் நடக்கின்றனவே தவிர, கவுன்சிலுக்கு என்று என்ன வேலை இருக்கிறது? ஏதோ ஒரு யோசனை சொல்லவேண்டிய வேலையாக இருக்கிறதே தவிர, மற்றப்படி நிர்வாகம் எல்லாம் கமிஷனரைப் பொருத்துத்தான் இருக்கிறது. இதற்காக ஆறு மாதம் இப்பொழுதுள்ள முனிசிபல் சபைகளின் ஆயுள் காலத்தை நீடித்து வைப்பதைவிட, இப்பொழுதுள்ள கவுன்சில்களையே கலைத்துவிட்டால் ஏதோ கவுன்சில் என்ற முறையை வைத்துக்கொண்டு, அடுத்த தேர்தலில் இப்பொழுதுள்ளவர்களே வெற்றி பெறக்கூடிய சூழ் நிலை இல்லாமலாவது போகும் என்ற காரணத்தை சர்க்காருக்கு உணர்த்து கிறேன்.

ஆனுல், சர்க்காரில் அமைச்சர்களாக இருந்துகொண்டு பொதுத் தேர் தலை நடத்துவது போலவே, முனிசிபல் கவுன்சிலர்களாக இருந்துகொண்டு கவுன்சில் தேர்தலை நடத்துவதற்காக தேர்தலை ஆறு மாதத்திற்கு ஒத்தி வைக்கிருர்கள் என்று எங்களுக்குப்படுகிறது. இந்த முறையிலே சாதா ரண முனிசிபாலிடியில் கூட கட்சியை வளர்த்துக் கொண்டு போனுல், நகரங்கள் எந்த முறையில் சீர்படும் என்று எனக்குத் தெரியவில்லை. ஆகையால், ஆறு மாதம் ஒத்திவைப்பதைவிட, கவுன்சில்களைக் கலைத்து விட்டு, ஜனவரி மாதமோ, பிப்ரவரி மாதமோ அல்லது மார்ச் மாதத் திலே கூட தேர்தலை நடத்தி, புதுக் கவுன்சில்களை ஏற்படுத்திவிடலாம் என்ற என்னுடைய யோசனையைக் கூறிக்கொள்கிறேன்.

இப்பொழுதுதான் வார்டுகள் பிரிக்கவேண்டுமென்று சர்க்காரிடமிருந்து முனிசிபாலிடிகளுக்கெல்லாம் தாக்கீது வந்திருக்கிறது. அதன்படி ஒவ் வொரு முனிசிபாலிடியும் கமிட்டி ஏற்படுத்தி வார்டுகளைப் பிரித்துக்கொண் டிருக்கிருர்கள். முனிசிபாலிடியில் இப்பொழுது உள்ளதுபோல் ரிசர்வ் சீட் என்று தனியாக இருக்கவேண்டிய அவசியம் இல்லை, அதை எடுத்துவிட்டு, ஜெனரல் சீட்டாகவே ஆக்கிவிடலாம் என்று வேலூரைப் பொறுத்தவரை யில் அங்கு மெஜாரிட்டி மெம்பர்கள் கருதிக்கொண்டு முடிவு செய் திருர்கள். ஏற்கெனவே, இருந்த 36 மெம்பர்களில் 4 ஷெட்யூல் வகுப் பினர்களுக்கும் இரண்டு பெண்களுக்கும் ஒதுக்கி வைத்திருந்ததுபோக, 30 வார்டுகளாக இருந்ததை இப்பொழுது 34 வார்டுகளாக ஆக்கி, பெண்

களுக்கு மாத்திரம் 2 ஸ்தானங்கள் ஒதுக்கியிருக்கிறார்கள். ரிசர்வ் சீட் என்பதே இல்லாமல் ஜெனரல் சீட்டாக 34 வார்டுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அந்தக் கமிட்டியில் நான் எவ்வளவோ எதிர்த்தும், ரிசர்வ் சீட் கொடுத்தாக வேண்டும் என்று சொன்னதற்கு, அப்படி ஒன்றும் நகரசபையைப் பொறுத்தவரையில் அமைக்கவேண்டிய அவசியம் இல்லை என்று மெஜாரிடியினர் சொல்லிவிட்டார்கள், ஹரிஜனங்கள் மெஜாரிடியாக இருக்கக் கூடிய இடத்தையே அவர்களுக்குக் கொடுத்துவிடலாம், அந்த இடத்திலிருந்து ஜெனரல் சீட்டிலேயே வரட்டும் என்று சொல்லிவிட்டார்கள். ஜாதி இந்துக்கள் இருக்கும் இடத்தில் கூட அவர்கள் வந்துவிடமுடியும், அவர்களுக்காக தனி இடம் ஒதுக்கவேண்டிய அவசியம் இல்லை என்று சொல்லிவிட்டார்கள். இந்த விதமாக வேலூர் முனிசிபாலிடி சம்பந்தப் பட்டவரையில் இப்பொழுது ஏறக்குறைய 15 வார்டுகளுக்குமேல் முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இதை யெல்லாம் பார்த்தால், உண்மையிலேயே ஒரு கட்சியார் தங்களால் முடிந்த வரையில் ஸ்தானங்களைக் கைப்பற்றித் திரவேண்டும் என்ற ஒரு காரணத்திற்காகத்தான் இம்மாதிரி செய்து கொண்டு வருகிறதே தவிர, உண்மையிலேயே ஒரு நகரத்தை நல்லபடி நடத்த வேண்டும் என்ற காரணத்திற்காக இல்லை என்று நன்றாகப் புலப் படுவதால், இப்பொழுதிருக்கும் முனிசிபல் கவுன்சில்களை நவம்பர் முதல் தேதியிலிருந்தே எடுத்துவிட்டு, புதுக் கவுன்சில்கள் ஏற்படுத்தும் வரைக்கும் அவைகளைக் கமிஷனர்களே நிர்வகித்து வரலாம் என்று கூறிக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கின்றேன்.

(Mr. Speaker in the Chair.)

## IV.—ANNOUNCEMENT BY THE HON. SPEAKER *RE* THE BUSINESS OF THE HOUSE.

MR. SPEAKER: I want to make two announcements to the House. The Business Advisory Committee which just met today has decided that the Panchayats Bill which was scheduled to be taken up on the 23rd instant may be taken up on the 22nd.

பஞ்சாயத்து மசோதாவை 23-ந் தேதி எடுத்துக்கொண்டு விவாதிக்க வேண்டும் என்று முதலில் தீர்மானித்திருந்தோம். ஆனால், 23-ந் தேதி எடுத்துக் கொள்வதற்குப் பதிலாக, 22-ந் தேதியே அதை எடுத்துக்கொள்ளலாம் என்று அலுவல் ஆலோசனைக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது.

சென்னை வெயிட்ஸ் அண்ட் மெஷர்ஸ் என்போர்ஸ்மெண்ட் மசோதாவையும் சென்னை பப்ளிக் ஹெல்த் மசோதாவையும் 22-ந் தேதியன்று எடுத்துக் கொள்வதாக இருந்தோம். அவைகளை 27-ந் தேதியன்று எடுத்துக் கொள்ளலாம் என்று இப்பொழுது தீர்மானித்திருக்கிறோம்.

இப்பொழுது சபை முன் இருக்கும் சென்னை ஜில்லா அபிவிருத்திக் கவுன்சில்கள் மசோதாவின் மீது பொது விவாதம் முடிந்த பிறகு, ஷரத்துவாரி விவாதத்தையும் நடத்தி, மசோதாவை நிறைவேற்றிவிட்டு, சென்னை நகர முனிசிபல் (திருத்த) மசோதாவையும் எடுத்துக்கொண்டு, பொது விவாதத்தை இன்றைக்கு முடித்து விடுவோம். இதன் மீது ஷரத்துவாரி விவாதத்தை நாளைக்கு வைத்துக்கொள்ளலாம்.

நாளைக்கு, உணவு விவாதம் மூன்று மணி நேரம் நடந்தால் போதும் என்று எல்லோரும் சொன்னார்கள். மூன்று மணி நேர உணவு விவாதத்திற்குப் பிறகு, சென்னை நகர முனிசிபல் (திருத்த) மசோதாவின் மீது ஷரத்துவாரி விவாதம் நடக்கும். தேவையானால் பிற்பகலிலும் மூன்று மணியிலிருந்து 5 மணி வரைக்கும் உட்கார்ந்து ஷரத்துவாரி விவாதத்தை முடித்துவிட வேண்டுமென்றும் அலுவல் ஆலோசனைக் கமிட்டி முடிவு செய்திருக்கிறது.

9th September 1958] [Mr. Speaker]

பஞ்சாயத்து மசோதாவை 23-ந்தேதி எடுத்துக்கொள்வதாக இருந்தால் 20-ந் தேதிவரை திருத்தம் கொடுக்கலாம் என்று சொல்லியிருந் தேன். 22-ந் தேதியே அம்மசோதாவை எடுத்துக்கொள்ளவேண்டு மென்று இன்று முடிவு செய்திருப்பதால், 19-ந்தேதி பிற்பகல் நான்கு மணிக்குள்ளாக இதற்கான திருத்தங்களை கனம் அங்கத்தினர்கள் கொடுத்துவிடவேண்டும் என்று தெரிவித்துக்கொள்கின்றேன்.

III.—GOVERNMENT BILLS—*cont.*

THE MADRAS DISTRICT MUNICIPALITIES (AMENDMENT) BILL, 1958—*cont.*

* **SRI A. GOVINDASAMY** : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, முனிஸிபாலிட்டி தேர்தலை நடத்துவதற்கு ஆறு மாத காலம் தள்ளிப் போட வேண்டுமென்ற அவசியம் இல்லையென்ற கருத்தை நானும் வலி யுறுத்த விரும்புகிறேன். பஞ்சாயத்து தேர்தலை நடத்த வேண்டியிருப்ப தால், முனிஸிபல் தேர்தலைத் தள்ளிப்போட வேண்டியிருக்கிறது என்று சொல்கிறார்கள். பஞ்சாயத்துத் தேர்தலை நடத்துகிறவர்கள் வேறு, முனிஸி பாலிட்டி தேர்தலை நடத்துகிறவர்கள் வேறு. ஒன்றுக்கு ஒன்று தள்ளிப் போடவேண்டிய அவசியம் இல்லை என்பதை நான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். பஞ்சாயத்துத் தேர்தலை, பஞ்சாயத்து ஆபீசர்களும், ஜில்லா போர்டுகளில் உள்ள குமாஸ்தாக்களும் நடத்துகிறார்கள். முனிசி பல் தேர்தலை முனிசிபல் கமிஷனரும், அங்குள்ள குமாஸ்தாக்களும் நடத்துவதால் ஒன்றுக்கொன்று என்ன இடையூறு ஏற்படும் என்று கேட்கிறேன். ஆகையால் பஞ்சாயத்துத் தேர்தல், முனிஸிபல் தேர்தலுக்கு இடையூறாக இருப்பதாகச் சொல்ல வேண்டாம் என்று கேட்டுக்கொள் கிறேன். இந்தக் காரணத்திற்காக இப்போது ஆறு மாத காலம் ஒத்தி வைப்பதாகச் சொன்னால் இந்த ஆறு மாதங்களுக்குள் பஞ்சாயத்து தேர்தல் எல்லா இடங்களிலும் முடிந்துவிடும் என்று சொல்ல முடியாது. ஆகவே அப்புறம் நடக்கவில்லை யென்று சொல்லி மேலும் தள்ளிப் போடுவார்களோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. ஆகையால் எல்லா இடங்களிலும் 1959 ஜனவரி 31-ந் தேதிக்குள் முனிஸிபல் தேர்தல் நடந்து முடிந்துவிட்டால் நல்லது என்று கருதுகிறேன்.

(Deputy Speaker in the Chair.)

மேலும் வோட்டர் லிஸ்டைத் திருத்த வேண்டுமென்ற கருத்தை நண்பர் விநாயகம் அவர்கள் வலியுறுத்தினார். வோட்டர் லிஸ்டில் அதிகத் தவறு இருக்கிறது என்பது உண்மை. உயிரோடு இருக்கிறவர்களை இறந்தவர் களுடைய ஜாப்தாவில் சேர்த்திருப்பதும், இறந்தவர்களை உயிரோடு இருப் பவர்களோடு சேர்த்திருப்பதும் போன்று அதில் தவறுகள் அதிகம் இருக்கின்றன. குறிப்பாக ஸ்ரீ கே. அன்பழகன் அவர்களுடைய பெயர் இறந்தவர்களுடைய ஜாப்தாவில் சேர்க்கப்பட்டு அதன் காரணமாக பல சிக்கல் எழுந்தது. ஹைக் கோர்ட் வரையிலும் சென்று உத்தரவு வாங்கி வந்த பிறகுதான் நாமினேஷன் அவர் பைல் பண்ணும்படியான சங்கடம் உண்டாயிற்று. ஆகையால் உடனடியாக வோட்டர் லிஸ்டைத் திருத்த வேண்டும். அதோடு வோட்டர் லிஸ்டைத் திருத்த வேண்டுமென்ற கார ணத்தைக் காட்டி மேலும் தேர்தலை ஒத்தி வைத்துக்கொண்டு போகாமல் மூன்று மாதத்திற்குள்ளாக அந்தக் காரியத்தை கனம் அமைச்சர் அவர்கள் முடித்துத் தர வேண்டும். அதோடு வோட்டர் லிஸ்டைத் தயாரிக்கிறவர்கள் ஆசிரியர்கள். அவர்கள் அதிக மனச் சங்கடத்தோடு வேலை செய்கிறார்கள். அவர்களுக்கு அதிகப்படி ஸ்பெஷல் அலவன்சு கொடுத்து இவ் வேலையில் அவர்கள் உற்சாகத்துடன் பிழை எதுவும் வராமல் வேலை செய்யும்படி யாகவும் பார்த்துக் கொள்ளவேண்டும். ஆகையால் எந்தக் காரணத்தை கொண்டும் தேர்தலை ஒத்திப்போடாமல் 1959-ம் வருஷம் ஜனவரி மாதம் 31-ந் தேதிக்குள் தேர்தலை நடத்தித் தர வேண்டுமென்ற உத்தரவாதத்தை கனம் அமைச்சர் அவர்களிடம் நான் எதிர்பார்த்து இதை வலியுறுத்திக் கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

## V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. *Statutory Rules, Orders and notifications.*

116. *Notification issued with G.O. Ms. No. 4534, Revenue, dated 8th December,* 1957 *and G.O. Press No.* 1977, *Revenue, dated 31st May,* 1958 *amending the Rules issued under the Madras Estates (Supplementary) Act,* 1956 (*Madras Act XXX of* 1956).

### B. *Report and other papers.*

32. *The Madras District Development Councils Bill,* 1958.

33. *The Madras City Municipal (Amendment) Bill,* 1958.

34. *The Madras District Municipalities (Amendment) Bill,* 1958.

35. *Proceedings and connected papers of the Legislature Committee on Local Administration (in IV parts).*



9th September 1958]

## APPENDIX I.

[*Vide* answer to starred question No. 89 asked by Sri V. K. Kothandaraman at the meeting of the Legislative Assembly held on 9th September 1958, page 391 supra.]

*Number of deaths due to smallpox during the period from 1st October 1957 to 31st March 1958.*

STATEMENT.

| Age group. | *Municipal areas.* | | | *Non-municipal areas.* | | | *Total for State.* | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | *Males.* | *Females.* | *Total.* | *Males.* | *Females.* | *Total.* | *Males.* | *Females.* | *Total.* |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) |
| Under one year. | 222 | 192 | 414 | 234 | 188 | 422 | 456 | 380 | 836 |
| One to ten years. | 351 | 312 | 663 | 324 | 303 | 627 | 675 | 615 | 1,290 |
| Ten years and above. | 398 | 412 | 810 | 448 | 492 | 940 | 846 | 904 | 1,750 |
| Total for all ages. | 971 | 916 | 1,887 | 1,006 | 983 | 1,989 | 1,977 | 1,899 | 3,876 |

NOTE.—Figures of deaths from small pox in panchayat areas are not separately compiled but are included in the figures for non-municipal areas.

## APPENDIX II.

[Vide answer to starred question No. 102 asked by Sri A. Vedarathnam at the meeting of the Legislative Assembly held on 9th September 1958, page 398 supra.]

(a) It is proposed to acquire 100 plots of 25 acres each before the end of 1958–59. Out of these, 22 plots have already been acquired during 1957–58.

(b) & (c) A statement showing the places where the Seed Farms have been opened on acquired lands and the amount of compensation paid therefor is given below :—

| Serial number and name of the farm. (1) | Whether twin or single. (2) | Located in — Village. (3) | Located in — Taluk. (4) | Located in — District. (5) | Amount of compensation paid. (6) RS. | NP. |
|---|---|---|---|---|---|---|
| 1 Deevambalpattinam | Twin | Deevambalpattinam | Tiruturaipundi | Tanjore | 95,224 | 47 |
| 2 Marudanallur | Single | Maruthanallur No. 132. | Kumbakanam | Do. | 76,673 | 71 |
| 3 Keeranthi | Twin | Keeranthi | Tiruturaipundi | Do. | 76,326 | 43 |
| 4 Kanchikudikadu | Do. | Kanchikudikadu | Mannargudi | Do. | 71,222 | 37 |
| 5 Nedumbalam | Do. | Nedumbalam No. 84 | Tiruturaipundi | Do. | 92,636 | 60 |
| 6 Nagamangalam | Do. | Nagamangalam | Mayuram | Do. | 1,34,520 | 60 |
| 7 Sakkottai | Single | Inam-Chidambaranatha-mudalithottam. | Kumbakonam | Do. | 68,500 | 00 |
| 8 Tiruvarankulam | Do. | Tiruvarankulam | Alangudi | Tiruchirappalli. | 48,218 | 75 |
| 9 Devadanam | Twin | Koviloor | Srivilliputhur | Ramanathapuram. | *1,03,761 | 07 |
| 10 Uthukottai | Single | Uthukottai | Tiruvullur | Chingleput. | 57,872 | 81 |
| 11 Sivakaveripakkam | Twin | Sivakaveripakkam | Kancheepuram | Do. | 41,712 | 81 |
| 12 Kolandalore | Do. | Kolandalore | Tiruvullur | Do. | 1,21,886 | 00 |
| 13 Nanjanad* | Twin | Nanjanad | Ooty | Nilgiris | *1,00,000 | 00 |
| | 22 farms. | | | | | |

* Since the amount of compensation has not yet been decided, it has not been paid so far. The amount has been kept in Revenue deposit.

Regarding the farms to be acquired in future and the amount to be paid therefor, it is not possible to give a definite reply as the setting up of farms depends upon many factors and the sites are being selected by various officers in the several districts.